# FOR THE APPLE OF YOUR EYE





22 GOLD

*Cadmium soldered to perfection*



T.B. Jewellery

Panagal Park

Nageswaran Road, T.Nagar, Chennai 600 017. Ph:434 2323/3442.

GOLD DESIGNERS SINCE 1933

 தீபாவளி நல்வாழ்த்துக்கள் 



# ரஜினியின் கடைசி படம்!

ரஜினி ரசிகர்களுக்கு, இந்தத் தீபாவளியும் 'சாதா' தீபாவளிதான். 'தலைவர்' படம் வரவில்லையே!

ஷங்கர், சுரேஷ்கிருஷ்ணா, கே.எஸ். ரவிக்குமார், விக்ரமன் ஆகியோர் ரஜினிக்கு ஏற்ற கதைகளை அவரிடம் சொல்லியிருக்கிறார்கள். உள்ளூர் பாலிடிக்ஸை அடிப்படையாக வைத்த அதிரடி ஆக்ஷன் கதை என்றால் ஆளும் அ.இ.அ.தி.மு.கவையும், ஜெயலலிதாவையும் மறைமுகமாக தாக்க வேண்டியிருக்கும். ஆனால் மக்கள் பெரும்பான்மை பெற்று மீண்டும் ஆட்சிக்கு வந்த ஒரு வருட காலத்தில் - அதுவும் சில காலம் வேறு ஒருவர் முதல்வராக இருக்கும் நிலையில் - ஜெயலலிதாவையோ, அல்லது அ.இ.அ.தி.மு.கவையோ அட்டாக் செய்தால் அது எடுபடாது என்று நினைக்கிறாராம் ரஜினி. எனவே தேசப் பாதுகாப்பு, பயங்கரவாதிகளை எதிர்த்துப் போராட்டம் என்ற வகையில் கதையை உருவாக்கலாமா என்று யோசனை செய்யப் படுகிறது. கதாநாயகிக்கு ஐஸ்வர்யாவிலிருந்து ஜோதிகா, லைலா, ஸ்நேகா என்று பெரிய பட்டியல் தயாரிக்கப் பட்டிருக்கிறது. யாருக்கு அதிர்ஷ்டம் அடிக்கும் என்று தெரியவில்லை. இதற்கிடையில் படத்துக்கு 'ரமணா' 'குபேரன்' 'ஏழு மலை' என்றெல்லாம் பெயர் வைத்து விட்டார்கள் வதந்தியாளர்கள்.

ஷங்கரோடு இணைந்து வேலை செய்ய ரஜினி விருப்பப்பட்டாலும், தனக்கும் தயாரிப்பில் பங்கு வேண்டும் என்கிறார் ஷங்கர். முதல்வனின் இந்தி பதிப்பான 'நாயக்' அடிவாங்கியதில் தயாரிப்பாளர் ரத்தினத்துக்கு ஏக நஷ்டம். ரஜினி படத்தைத் தயாரிப்பதில் பங்கு இருந்தால் ரத்தினத்துக்கு உதவி செய்யலாம் என்பது சங்கரின் திட்டம். தயாரிப்பில் வேறொருவரின் பங்கு இருப்பதை ரஜினி விரும்புவாரா?

எது எப்படியிருந்தாலும் வரும் தமிழ் வருடப் பிறப்புக்கு, தமது படம் ரிலீஸாக வேண்டும் என்பதில் தெளிவாக இருக்கிறார் ரஜினி. "பெரும்பாலும் இதுவே ரஜினியின் கடைசி படமாகக்கூட இருக்கலாம்'' என்கிறார் அவரது நண்பர். அப்படியென்றால்?...

2003ல் அரசியலில் ரஜினியின் கொடி பறக்குமாம்... வாரே வா!!

- ஸ்ரீநிவாஸன்

படம் : சௌரா

ஜெயாவில் மைதிலீஸ் ஜடை பின்னிப் பூச்சூடும் அழகைப் பார்த்தால் ஆண்களுக்கும் ஆசை வரும் இப்படியொரு சிகையலங்காரம் செய்துகொள்ள.

சாதாரணமாய்க் கிடைக்கக்கூடிய மரிக் கொழுந்து, லில்லி முதலிய பூக்களைக் கொண்டு பளிச் பளிச்சென்று கலர் கலராக ஊசி நூலால் தைத்துக் காட்டினார் மைதிலீஸ். காணக் கண் ஏழெட்டு வேண்டும். அத்துடன் அவர் நிறுத்தியிருந்தால் நன்றாயிருந்திருக்கும். ஒரு முடிவுரை கூறினார்: 'தைப்பதற்குப் பயன் படுத்தும் ஊசியைக் குழந்தைகளின் கைக்கு எட்டாமல் வையுங்கள். இல்லாவிட்டால் குழந் தைகள் அம்மாவுக்குத் தலை பின்னி விடு கிறேன் என்று சொல்லி ஊசியை எடுத்து வாயில் போட்டுக் கொண்டு விடும்.'

அவசியமான எச்சரிக்கைதான். ஆனால், 'ஜடையுமாச்சு, பூவுமாச்சு, எதற்கு வம்பு' என்று தாய்மார்களுக்குத் தோன்றி விடாதோ? Would not it scare people away?

லூஸ் மோகன் அப்படியொன்றும் லூஸூம் அல்ல, டைட் மோகன்தான் என்பது அவரை ஒருவருக்கு மூவரா கக் குடைந்து கொண்டிருந்தபோது தெரிந்தது. திரையில் அவர் காட்டும் மெட்ராஸ்தனமான பேச்சு, இந்தப் பேட்டியிலும் வெளிப்பட்டதென் றாலும் மனுஷன் மனத்தில் பட்ட தைப் பேசுகிறார். Be not a traitor to your thoughts என்று நம்புகிறவர்.

'என் பிள்ளை நடிகனாக வரப் போவதில்லை. என் பேரப் பையன் வரக் கூடும்' என்றவர் 'இன் னாருக்கு இன்ன படி என்று அவன் என்ன எழுதியிருக் கிறானோ அப்படித் தான் நடக்கும்' என்று தத்துவம் சொன்னார்.

'காத்துலே நிறையக் கல்மிஷம் சேர்ந்து போச்சுங்க. அதனாலே பூமி மாறுது. பூமி மாறு வதாலே மனுசங்களும் மாறுகிறாங்க' என்று மேலுமொரு தத்துவத்தை வீசினார். 'ரத்த தானம் செய்வதுண்டா' என்று இவரிடம் போய்க் கேட்கலாமா? கேட்டார்கள். 'நான் எங்கேங்க ரத்தம் கொடுக்க முடியும்? எனக்குத்தான் யாராச்சும் கொடுக் கணும்' என்றார் அப்பட்டமாக.

'ஏன் எப்பவும் பஸ்ஸிலே போறீங்க?' என்று யாரோ கேட்டார் களாம். 'காரிலோ ஆட்டோவிலோ இரண்டு மூன்று பேர்தான் துணைக்கு இருப்பாங்க. பஸ்ஸிலே போனால் எனக்குப் பாதுகாப்பாய் நாற்பது ஐம்பது பேர் இருப்பாங் களே?' என்று பதில் சொன்னதாகச் சொன்னார். சீரியஸான சிரிப்பு நடிகர்தான் லூஸ் மோகன்.





விணோத்

ஃபாஷன் ஷோக்களுக் காகவே தன்னை அர்ப்பணித்துக்

# ஆண்களுக்கும் ஆசை வரும்!



கொண்டிருக்கிறது எஃப்டிவி என்ற சேனல். வெளிநாட்டு சமாசாரம்தான் பெரும்பாலும். அக்கரைச் சீமைக்காரர்களுக்கு உடை விஷயத்தில் அக்கறை கிடையாது என்பது உலகமறிந்த விஷயம். 'ஐயையோ, இப்படியெல்லாம் காட்டலாமா, தர்மமா, நியாயமா' என்று கோபப்பட்டுப் புண்ணியமில்லை. புகழ் பெற்ற இத்தாலிய டைரக்டரான விட்டாரியோ டீ ஸிகா ஒருமுறை சொன்னதாவது: Moral indignation is in most cases 2 percent moral, 48 percent indignation and 50 percent envy.

மிலான் நகரில் நடந்த ஒரு ஃபாஷன் கண்காட்சியைப் பார்த்தபோது, இவற்றில் கலந்து கொள்வதற்கான தகுதி ரொம்ப ஸிம்பிள் என்று தோன்றியது. அனாதைகளின் விடுதிக்குப் போக வேண்டியது. அவர்கள் கிழித்து எறிந்துவிட்ட ஆடைகளை இன்னும் கொஞ்சம் கிழித்துச் சுற்றிக் கொள்ள வேண்டியது. (தெரியக்கூடாத இடத்திலெல்லாம் உடம்பு தெரிகிறதே என்று கூச்சம் கீச்சம் கொள்ளக்கூடாது.)

பிறகு தலையில் ஒரு பக்கெட் தண்ணீரைக் கொண்டு, துவாலையால் துவட்டிக் கொள்ள வேண்டியது. ஆனால் சீப்பு எடுத்து வாரிக் கொள்ளாமல், அப்படியே பரட்டை பரட்டையாய் முகத்தின் மீது முடியைத் தொங்க விட வேண்டியது. பிறகென்ன, மேடையிலே அழகு நடை போட வேண்டியதுதான். அவையினர் ஆவென்று வாயைப் பிளக்கவில்லை என்றால் அவர்கள்தான் பைத்தியம்.

**ச**ந்தூர் வாத்தியம் பாரசீகத்திலிருந்து வந்தது. பாரசீக மொழியில் அதற்கு 'நூறு தந்திகள்' என்று அர்த்தம். சம்ஸ்கிருதத்தில் 'சத தந்த்ரிக் வீணா' என்கிறார்கள். பெயர் எப்படியோ போகட்டும். என்ன அற்புதமான நாதம் அது தருகிறது! Instrument is irrelevant. The music speaks.

ராஜ் டி.வியில் ஒரு கலைஞர் சந்தூர் வாத்தியத்தில் இசை நிகழ்ச்சி நடத்தினார். (நடு நடுவேயாவது, கடைசியிலாவது அவர் பெயரைப் போடக் கூடாதா? அக்கிரமம்)

பழங்காலத்துக் கணக்குப் பிள்ளை மேஜை மாதிரியான ஒரு குட்டி மேஜை மீது இந்த வாத்தியத்தை வைத்து, ஸ்பூன் போன்ற இரண்டு சிறிய கம்பிகளைக் கொண்டு தட்டித் தட்டி நாதம் எழுப்பினார். இஞ்ச் கூடத் தலை நிமிர்த்தாமல் கருவியிலேயே கண்ணாயிருந்தார். 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ' வாசித்தபோது கீதத்தில் உள்ள குழைவுகள் கொஞ்சமும் மாறவில்லை. குறையவில்லை. கிருஷ்ணன் வழக்கத்தை விட வேகமாய் வந்திருப்பான்.

**A**ll happiness depends on a leisurely breakfast சாப்பிட எதுவும் கிடைக்காதபோது சில நிமிடம் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்றால் ஏதாவதொரு குழந்தை நிகழ்ச்சியைப் பாருங்கள். எந்தச் சேனலாக இருந்தாலும் சரி, எந்த மொழியாக இருந்தாலும் சரி.

துறுதுறுப்பான குழந்தை, 'தேமே'ன்னு இருக்கும் குழந்தை, மிரண்டு போயிருக்கும் குழந்தை, பக்கத்துக் குழந்தையைப் பார்த்துக் கொண்டிருக்கும் குழந்தை – இப்படி எத்தனை வகை! கள்ளங்கபடமில்லாத அந்த முகங்களில் எவ்வளவு பாவங்கள்!

மரம் வளர்ப்பதன் அவசியத்தை எடுத்துச் சொல்லும் நோக்கத்துடன் 'பொதிகை'யில் 'ஒண்டர் பலூன்' நிகழ்ச்சி நடந்தது. ஓர் அட்டையை மரம் போல கழுத்து வரை சுற்றிக்கொண்டு, பின்னால் ஓர் அட்டை மரத்தை வைத்துக் கொண்டு, கால் கடுக்க நின்றிருந்தான் ஒரு பையன். ஒரு பெண்மணி கதைகள் சொல்ல, ஒரு பையன் கீபோர்டு வாசிக்க, எந்தக் கணமும் இந்தச் சிறுவன் மரத்தோடு கீழே விழுந்து விடுவான் என்று பரிதாபம் ஏற்பட்டது. மரம் வளர்ப்பது பற்றி அவனுக்கு எந்த ஆர்வமும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் முகத்தை மட்டும் கடைசி வரையில் பொறுமையாக, புன்னகையாக வைத்துக் கொண்டிருந்தான். வாழ்க, அந்த மரச் சிறுவன்!

பெங்கால் பூச் சென்டு பூமிகாவுடன் கைகோத்தபடி அசத்தலாய் ஆடிக் கொண்டிருந்தார் அந்த இளைஞர். பின்னணியில் பூந்தோட்டமாய் நாற்பது நடன நங்கைகள். இவரும்கூட தோற்றத்தில் ஒரு பூமாதிரி மென்மையாகத்தான் தெரிகிறார். நல்லவேளை பளபள கன்னங்களில் படர்ந்திருக்கும் கருகருதாடி, முகத்தை மெச்சூர்டாகக் காட்டுகிறது. அஜித், விஜய் வயிற்றில் கிலோ கணக்கில் புளிகரைக்க வந்திருக்கும் அந்தப்புது கதாநாயகன் 'ரோஜா கூட்டம்' ஸ்ரீகாந்த்.

படப்பிடிப்பு இடைவேளையில் வந்து- 'ஹாய்' என்று பூ மாதிரி சிரித்துவிட்டு தன் பூங்கொத்தால் கைகுலுக்கிய ஸ்ரீகாந்துக்கு நாம் வைத்த பரீட்சை இதுதான். 'பு'வில் முடிகிற நம் வார்த்தைகளுக்குப் பொருத்தமாக, பட்டென்று பதில் தர வேண்டும்.

**முன்பு** : அப்பா கிருஷ்ணமாச்சாரிக்கு

# முதலில் சச்சின் பிறகு பில்கேட்ஸ்



காவேரிப் பாக்கம். அம்மா ஜெயந்திக்கு பூர்வீகம் மன்னார்குடி! அப்பா பெயருடன் எனது பெயரைச் சேர்த்தால் வருவது 'கிருஷ்ணமாச்சாரி ஸ்ரீகாந்த்'. இயல்பாக அமைந்த இந்தப் பெயர் பொருத்தம், நான் ஒரு பெரிய கிரிக்கெட் ஆட்டக்காரனாக ஆகணும்கிற உத்வேகத்தைக் கொடுத்துவிட்டது. தமிழ்நாடு கிரிக்கெட் கிளப்பில், நாலாவது டிவிஷனில் நிறைய ஆடியிருக்கிறேன். சிறந்த பௌலர் என்ற பெயரும், பாராட்டும் வாங்கியிருக்கிறேன். ஆனால் கிரிக்கெட் கிளப்பில் இருக்கிற சில சொல்ல முடியாத சிக்கல்களால் அதற்குமேல் வளர முடியவில்லை.

**பின்பு** : சச்சின் மாதிரிதான் ஆக முடியவில்லை. பில்கேட்ஸ் மாதிரி ஆகிவிடலாம்

என்று கம்ப்யூட்டரை ஒரு கை பார்த்தேன். எனது ஒரே அண்ணனும் அமெரிக்கா போய் கேனான் இன்டர்நேஷனல் நிறுவனத்தில் வேலை பார்க்கிறார். அவர் ஆலோசனையில் அவரோடு போய் செட்டில் ஆக முடிவு செய்துவிட்டேன். அப்போது பார்த்து 'நீ ஏன் மாடலிங் செய்யக் கூடாது'னு நண்பர்கள் அதில் இறக்கிவிட்டு விட்டார்கள். ரேம்ப் மாடலாக பதினைந்து ஃபேஷன் ஷோக்கள் செய்தேன். மிஸ் இண்டியாக்களோடு நடந்திருக்கிறேன். அப்புறம் விளம்பர வாய்ப்பு. 'ஸ்பிரைட்' விளம்பரத்தில் 'ஜாலியா இருக்கலாம் வா' என்று சக தோழனை அழைக்கும் அந்த வால் பையன் நான்தான். 'பாரதிராஜாவுக்கு ஹீரோ வேணுமாம் வா' என்று நண்பர் அழைத்துப் போனார். பாரதிராஜா என்னைப் பார்த்துவிட்டு 'அடுத்த படம் வரை காத்திரு' என்றார். நான் அதை மறந்தே போனேன்.

**வாய்ப்பு** : மாடல் கோ ஆர்டினேட்டர் திருமதி ருக்மணி சொல்லி, இயக்குனர் சசியைச் சந்தித்தேன். என்னை, மேலும் கீழும் பார்த்தார். என் உடல் மொழியை ரகசியமாகக் கண்காணித்தார். உடனே ஸ்க்ரீன் டெஸ்ட். மறுநாள் முடிவு சொல்வதாகச் சொன்னார்கள். சோர்ந்து போய் வீடு வந்து விட்டேன். காரணம் அந்தப் படத்துக்கு ஒரு முன்னணி ஹீரோவின் கால்ஷீட் கிடைத்து, அட்வான்சும் கொடுக்கப் போகிறார்கள் என்று தெரிந்து கொண்டேன். ஆனால் மறு நாள் கூப்பிட்டு, 'நீதான் ஹீரோ' என்றார்கள். சிறகுகள் மட்டும் இருந்திருந்தால் ஒரு சுற்று நிலவு வரையிலும் பறந்துவிட்டு வந்திருப்பேன். அவ்வளவு சந்தோஷம்.

**வியப்பு** : இயக்குனர் சசி. ரொம்ப மென்மையானவர். ஒவ்வொரு காட்சியையும் சிற்பம்போல செதுக்குபவர். காட்சியையும், வசனத்தையும் சொல்லிக் கொடுத்த சசி, நடிக்கச் சொல்லித் தரவில்லை. 'காட்சியில் உள்ள சூழ்நிலையை உணர்ந்து, உங்கள் பாத்திரம் எப்படி நடந்து கொள்ளுமோ அதுபோல நடிங்க... திருத்தம் இருந்தால் மட்டும்நான் சொல்கிறேன்' என்று என்னை நம்பிய தன்னம்பிக்கை இயக்குனர்.

**படிப்பு** : கேளம்பாக்கம் இந்துஸ்தான் காலேஜ் ஆஃப் சயின்ஸில் பிஎஸ்சி கம்ப்யூட்டர் சயின்ஸ் முடித்திருக்கிறேன். எங்கள் கல்லூரியில் அடிக்கடி சினிமா ஷூட்டிங் நடக்கும். பிரபுதேவா, விஜய்காந்த் போன்ற ஹீரோக்களை அங்கே வேடிக்கை பார்த்திருக்கிறேன்.

# இப்போ ஹீரோ!

**கரும்பு** : 'ரோஜா கூட்டம்' படத்தின் கதைதான். 'சொல்லாமலே' படத்தில் எப்படி புத்தம் புதிதான எமோஷனல் லவ் சொன்னாரோ, அதேபோல, இதுவரை சொல்லப்படாத ஒரு டீசென்ட் காதலைச் சொல்லியிருக்கிறார். படத்தின் முதல் பாதியில் பயங்கர லூட்டி அடிக்கும் ஒரு துடிப்பான கல்லூரி மாணவன். அவ்வளவு

# அருள்வாக்கு!

**ம**னுஷ்யர்களாக இருந்து ரொம்பவும் நிறையப் புண்ணியம் செய்ததால் தேவர்களாகவே ஆகி தேவலோக வாஸம் பெற்ற சிலரைப் பற்றியும் புராணங்களில் இருப்பது வாஸ்தவந்தான். ஆனால் தேவர்களுக்குமே கூட தேவலோகத்தில் நிரந்தர வாஸமில்லை என்றும் அந்தப் புராணங்களே சொல்கின்றன. தேவர்களை சூரபத்மன் அடித்துத் துரத்தினான், மஹிஷாஸுரன் அடித்துத் துரத்தினான், இந்திரன் உள்பட தேவர்கள் பூலோகத்திலே வந்து திண்டாடினார்கள் என்றெல்லாமும் புராணத்தில் இருக்கிறது. அதனால் தேவலோகத்தில் எப்பொழுதும் இருக்க முடிந்தால் சாச்வத ஸந்தோஷமாக இருக்கும் என்று hypotheticalஆக வேண்டுமானால் சொல்லலாமே தவிர அப்படி யாரும் இருந்ததில்லை; இருக்கவும் முடியாது என்று தான் தெரிகிறது.

இந்திரியத்தால் ஸந்தோஷம் என்கிற போது, வெளியிலே உள்ளவற்றை அநுபோகம் பண்ணுவதால் தான் இது கிடைக்கிறது. வெளியிலே இருப்பதை, எப்படி எப்போதும் நம்மிடம் தக்க வைத்துக் கொள்ள முடியும்? அது கையை விட்டுப் போனாலும் போகும் தான். காமதேனுவும்,



கல்பக விருக்ஷமும், ஐராவதமும், இந்திராணியுமே கூட இந்திரன் கையை விட்டுப் போய், அவன் தனியாகத் தவித்த ஸந்தர்ப்பங்கள் இருந்திருக்கின்றன. ஆகையால், வெளியிலிருப்பதை depend பண்ணுகிற (சார்ந்திருக்கிற) தேவலோக இந்திரிய ஸௌக்யம் நிஜத்தில் சாச்வதமேயில்லை. வெளி-உள் என்று எதுவுமே இல்லாமல் ஆத்மாவிலேயே, ஸ்தித ப்ரக்ஞன் என்று பகவான் (கீதையில்) சொன்னது போல் ஆணி அடித்த மாதிரி ஊன்றிவிடுகிறவனுக்குத்தான் ஸதானந்தம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஜாலியாக இருந்த அவன் எப்படி அடியோடு மாறிவிடுகிறான் என்பது இரண்டாவது பாதி. இரண்டு பரிணாமம் உள்ள கேரக்டர் எனக்கு.

பொறுப்பு : தயாரிப்பாளர் ஆஸ்கார் ரவிச்சந்திரன், அவர் கம்பெனியின் முதல் புதுமுகம் என்கிற மிகப்பெரிய பொறுப்பைக் கொடுத்திருக்கிறார். படத்தின் மொத்த பட்ஜெட் ஆறு கோடி. 'இதை உங்க சம்பளமாக நினைத்து கவனமாக நடிக்க வேண்டும். உங்களை நான் ஒரு புதுமுகமாக நினைக்கவேயில்லை. 'பூவெல்லாம் உன் வாசம்' படத்திற்கு செய்த மாதிரியே பெரிய அளவில் விளம்பரம் செய்வேன் என்று சொல்லியிருக்கிறார். எனது காஸ்ட்யூம்களையும்கூட நானே தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் கொடுத்திருக்கிறார். அவரது பண்பு வியப்பூட்டுகிறது.

நெருப்பு : சண்டை, டான்ஸ் என்று எதுவும் கற்றுக் கொள்ளாமலேயே ஹீரோ வாகிவிட்டேன். அதிலும் கொஞ்சம்கூட சண்டை போடத் தெரியாது. கனல் கண்ணனிடம் இதைச் சொன்னபோது, 'கவலைப் படாதே. என் உதவியாளர்களைக் கொண்டு உனது வீட்டிலேயே கற்றுத் தருகிறேன்' என்றார். நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஷூட்டிங் தினசரி முடிந்த பிறகு, மதுரவாயிலில் இருக்கும் அவரது வீட்டிற்குப் போய்க் கற்றுக் கொண்டேன். கனல் கண்ணனே எனக்குச் சண்டை கற்றுக் கொடுத்தார். இப்போது நான் சூப்பராக சண்டை போடுகிறேன்.

விருப்பு : நான் பச்சைத் தமிழன். எனக்கு நானே டப்பிங் பேச வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அந்த வாய்ப்பை முதல் படத்திலேயே சசி எனக்குக் கொடுத்திருக்கிறார்.

மலைப்பு : பூமிகா. 'பத்ரி' படம் பார்த்து விட்டு 'பூமிகா எத்தனை அழகு'ன்னு நண்பர்களோடு கமெண்ட் அடிச்சு ரசிச்சிருக்கேன்.

அவரோடு நடிப்பது எனக்கே பிரமிப்பு. அவரோடு நல்ல நட்பு. அவரது நடிப்பு மலைப்பு.

*(ஸ்ரீகாந்த் பரீட்சையில் தேறினாரா என்று எழுதிப் போட வேண்டியது எறும்பு போல் சுறுசுறுப்பான இளம் வாசகிகளின் பொறுப்பு!)*

சிந்திப்பு, சந்திப்பு : **ஸ்ரீசக்கரம்**

1964ல், 'தெய்வத்தாய்' படத்துக்கு வசனம் எழுதி, திரையுலகில் அடியெடுத்து வைத்தார் கே. பாலசந்தர். 2001ல் 'பார்த்தாலே பரவசம்' என்று சொல்லி, செஞ்சுரி அடித்திருக்கிறார். இயக்குனர் சிகரம் கே. பாலசந்தரைச் சந்தித்தபோது...





# "உணர்ச்சிகளால் இயக்கப் படுகிறேன்!"

**கே. பாலசந்தர்**

**உங்கள் படங்கள், ஒவ்வொரு கட்டத்திலும் சம காலத்தவையாக இல்லாமல், 'அஹெட் ஆஃப் டைம்ஸ்' ஆக இருந்திருக்கின்றன. இது, ரசிகர்களுக்கு ஏற்றுக் கொள்ள தயக்கம் ஏற்படுத்துமில்லையா?**

நீங்கள் சொல்கிற 'அஹெட் ஆஃப் டைம்ஸ்' காரணத்துக்காகத்தான் நான் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறேன். அதற்காக நான் பெருமைப்படுகிறேன். 'அரங்கேற்றம்' போன்ற சப்ஜெக்ட்களை முப்பது வருடங்களுக்கு முன்பு மட்டுமில்லை. இன்றைக்கும் கூட எடுக்கிற துணிச்சல் யாருக்கும் இல்லை. 'நீர்க்குமிழி' காலத்தில் இருந்தே, ஹீரோ என்றால் அழகாக இருக்க வேண்டும்; டூயட் பாட வேண்டும்; சண்டை போட வேண்டும் என்கிற மரபுகளை எல்லாம் உடைத்துவிட்டேன். கதைக்கு ஒரு பிரதான கதாபாத்திரம் வேண்டும். அது நாகேஷோ... சுஜாதாவோ... யாராகவும் இருக்கலாம் என்பது என் பாலிஸி.



பட்டவன். நானே எழுதி, நடித்து டைரக்ட் செய்து, புகழ் பெற வேண்டும் என விரும்பியவன். ஆனால் அது பளு வான காரியம் என உணர்ந்தேன்.

டீ.வியில் நடிக்க வந்தது ஒரு விபத்து என்றுதான் சொல்ல வேண்டும். என் நண்பர் அனந்துவை அந்த கதாபாத் திரத்தில் நடிக்க வைக்கவே நான் நினைத்திருந்தேன். துரதிருஷ்டவசமாக அவர் மறைந்துவிட, அந்த கேரக்டரில் நானே நடித்துவிட முடிவு செய்தேன்.

**ஒவ்வொரு சீசனில் ஒரு குறிப் பிட்ட நடிகையை, நடிகரை நீங்கள் அதிகமாகப் பயன்படுத்திக் கொள் வதைப் பார்க்கிறோமே! திடீரென்று இப்படி ஒருவரைப் பிடிப்பதும், அப் புறம் விட்டு விடுவதும் ஏன்?**

நான் அறிமுகப்படுத்துகிறவரை அவ ரது முழு திறமையும் வெளிப்படுவது போல, பயன்படுத்திக்கொண்டு விடு கிறேன். அப்படியும் மிஞ்சியதை அடுத்த படத்தில் பயன்படுத்திக் கொள்ள நான் தயங்கியதேயில்லை. இதற்கு 'பார்த் தாலே பரவசத்தில்' வரும் வாலியும், சிமாவும் உதாரணம்.

**'நீர்க்குமிழி' வெளியானபோது இருந்த தன்னம்பிக்கை, டென்ஷன், இன்று நூறா வது படம் ரிலீஸ் ஆகிறபோது உங்களு டைய தன்னம்பிக்கை, டென்ஷனை ஒப்பிடுங்கள்.**

எந்த படம் எடுத்தாலும், ரசிகர்கள், சொல்கிற விஷயத்தை ஜீரணித்துக் கொள்ள வேண்டுமே, படத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமே என்கிற டென்ஷன் இருக்கவே செய்யும். முதல் படம் ரிலீஸ் ஆனபோது எனக்கு அசாத்திய தன்னம்பிக்கை இருந்தது. 'மேஜர் சந்திரகாந்த்' படத்தை எடுத்தபின் அதைத் தயாரிப்பாளரான ஏவி. மெய்யப்ப செட்டியாருக்குப் போட்டுக் காட்டினார் கள். படத்தைப் பார்த்துவிட்டு அவர், 'உங் களை நினைத்து நான் பெருமைப்படுகிறேன்' என்றார். எனக்கும் என் மீதே அபார தன் னம்பிக்கை ஏற்பட்டது. இன்றைக்கு, அந்த தன்னம்பிக்கை இருக்கிறதா என்றால், இல்லை என்று நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

**கமல், தன் படம் ஒன்றில் நடிக்கக் கூப்பிட்டபோது, நடிக்க மறுத்த நீங்கள் டீ.வி தொடரில் நடிக்க வந்தது ஏன்?**

நான் அடிப்படையில் நடிக்க ஆசைப்

**இன்று திரைப்படங்களில் செக்ஸ், வன்முறை அதிகமாகி விட்டதே?**

வெற்றி பெற்ற படங்களில், வெற் றிக்குக் காரணமாக இருந்தது எது என்று பார்க்கிறார்கள். அந்தப் படத்தில் வெற்றிக்கு முக்கிய பங்களித்த விஷயம் எதுவாக இருந்தாலும் அதில் இடம் பெற்ற செக்ஸ் அல்லது வன்முறை இவர்களுக்குச் சட்டென்று அப்பீல் ஆகிறது. அதைத் தம் படங்களில் இடம் பெறச் செய்து விடுகிறார் கள். இதை ஏறத்தாழ அனைவருமே செய்து கொண்டிருப்பதால், சினிமாவில் இவை அதிகரித்துவிட்டன.

**சினிமாத் தணிக்கை கருத்துச் சுதந்தரத் துக்குத் தடை போடுகிறதா?**

'உதட்டோடு உதடு முத்தம் தரக்கூடாது' என்கிறது சென்சார் விதி. இன்று என்ன நடக்கிறது? உதடு தவிர மற்ற எல்லா இடங் களிலும் முத்தம் தருவது காட்டப்படுகிறது. அதைத் தடுக்க முடிவதில்லையே!

இன்று சாட்டிலைட் சேனல்கள் மூலம், சென்சார் போர்டு, சினிமாவில் கட்டுப்படுத் தும் எல்லா விஷயங்களும் வீட்டுக்குள்ளே வந்து விடுகின்றன. இப்படி காட்சி



''இந்த ஆட்சியிலே 'டிரான்ஸ்பர்' கொஞ்சம் ஓவர்தான். ஆறு மாசத்துல ரெண்டு தடவை எனக்கு டிரான்ஸ்பர் ஆர்டர் வந்திருக்கு!''

''இதில் என்ன அதிசயம்!''

''யோவ்! எனக்கு இன்னும் வேலையே கிடைக்கலய்யா!''

— ஆர். பிரசன்னா

எடுத்தால் நேயர்களின் அபிமானத்தை இழந்துவிடுவோம் என்று தாமாகவே சுய கட்டுப்பாட்டுடன் இருந்தால்தான் உண்டு.

இதெல்லாம் ஒரு புறம் இருந்தாலும் கூட சென்ஸார் என்பது தேவை என்றே நான் நினைக்கிறேன். நானே ரொம்ப இன்வால்வ் ஆகி, ஒரு காட்சியை எடுக்கிறபோது, இமோஷனலாக எப்போதாவது வரம்பை மீறலாம். அப்போது என் படத்துடன் சம்பந்தப்படாத ஒருவர் பார்த்து இது வேண்டாம் என்று சொல்வது அவசியம் என்றே நான் நினைக்கிறேன்.

மற்றபடி, சென்சார், கருத்துச் சுதந்தரத்துக்குக் கட்டுப்பாடு என்பதை நான் ஏற்கவில்லை. மொத்த படத்திலும், சென்சார் போர்டு ஆட்சேபிக்கிற ஓரிரு காட்சிகள், வசனங்களை வெட்டுவதால், கருத்துச் சுதந்தரம் பறிபோய் விட்டதாகச் சொல்வதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

**எந்தப் படத்தின் க்ளைமாக்ஸ் உங்களுக்கு ரொம்பப் பிடித்தது?**

நான் தவறான ஆலோசனைகளைக் கேட்டுத் தடம் மாறி எடுத்துத் தடுமாறியது, 'டுயட்' பட கிளைமாக்ஸ். ஹீரோ பிரபு, வில்லன் பிரகாஷ் ராஜ் என்பதால், ஆக்ஷன் கிளைமாக்ஸ்தான் பொருத்தமாக இருக்கும் என்று (தவறாக) முடிவு செய்தேன். ஆனால் பொதுவாகவே நான் ஸ்டிராங்கான கிளைமாக்ஸ்தான் வைப்பேன். ஒவ்வொன்றுக்கும் சீரியஸாக யோசித்துத்தான் முடிவு செய்வேன். ரொம்ப பிடித்தது என்று 'அவள் ஒரு தொடர்கதை' கிளைமாக்ஸைச் சொல்லலாம். 'பார்த்தாலே பரவசம்' கிளைமாக்ஸ் கூட அருமையான கிளைமாக்ஸ்.

**டி.வி, சினிமாவை பாதிப்பது ஒரு பக்கம் இருக்கட்டும். சினிமா உலகத்தின் உள்ளேயே, பலவித பிரச்னைகள். ஒருவருக்கொருவர் அனுசரணையாக இல்லையே, ஏன் இந்த நிலைமை?**

நீங்கள் சொல்லுவது சரிதான். ஒரு பற்பசை கம்பெனி, இன்னொரு பற்பசை கம்பெனியைத்தான் போட்டியாக நினைக்கிறது. இன்னொரு சோப்புக் கம்பெனியைப் போட்டியாக நினைப்பதில்லை. ஆனால், சினிமா உலகில் தயாரிப்பாளர், டைரக்டர், நடிகர், நடிகையர், தொழில்நுட்பப் பிரிவு, விநியோகஸ்தர், தியேட்டர்காரர்கள் என்று பல தரப்பினரும் மற்றவர்களை எதிரிகள் போல பார்க்கிற மனோபாவம் நிலவுகிறது.

இது தவிர ஈகோ பிரச்னை வேறு. இந்தப் போக்கு எனக்கும் வருத்தம் தருகிறது. ஆனால் பூனைக்கு மணி கட்டுவது யார்? இது சினிமா உலகுக்கு ஆரோக்கியமான விஷயமில்லை.

**நீங்கள் கோபக்காரர் என்று சினிமாவில் எல்லோருமே சொல்கிறார்கள். மேடையில் பேசுகிறபோதும், ரொம்ப உணர்ச்சி வசப்படுகிறீர்கள். வயது ஆக, கோபம், இமோஷன் குறைந்து, சாந்தம்தானே வந்திருக்க வேண்டும். உங்கள் விஷயத்தில் மட்டும் ஏன் அப்படியில்லை?**

வழக்கமாக ஒருவர் ஐம்பத்தைந்து வயதில் ஆக்டிவ் வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி விடுவார்கள். இப்போது என் வயது எழுபத்து ஒன்று. ரிடையர்மென்ட் வயதுக்கு அப்புறமும் பதினாறு வருடங்களாக சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருக்கிறேன். நான் இன்னமும் ஓர் இமோஷனலான மனிதனாக இருப்பதுதான் என்னுடைய பிளஸ் பாயிண்ட். நான் வெற்றி பெறாமல் தோல்விகளையே சந்தித்திருந்தால் அடங்கி ஒடுங்கி எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ளும் சராசரி மனிதனாக மாறி இருப்பேனோ என்னவோ!

'பார்த்தாலே பரவசம்' படப்பிடிப்பில் 'இத்தனை வயதில், இவ்வளவு சுறுசுறுப்பாக இருக்கிறீர்களே!' என்று மாதவன் கூட மாய்ந்து போனார்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

ஆட்சிக்கு
வந்து
ஆறு மாதமாச்சே...
போணி பண்ணுங்க...

கஜானா காலி....
கருணாநிதி போலி!...
எங்களுக்கு ஜாலி!



2001 நவம்பர் 18
விஷு கார்த்திகை 3
மலர் : 60
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ‘கஜானா காலி’–கலாட்டா பல்லவி!

ஓர் அரசு பதவியிறங்கி மற்றொன்று ஆட்சி அமைக்கும்போது ‘கஜானா காலி’ என்ற பல்லவியைப் பாடுவது வழக்கம்தான். ஆனால், ஆட்சியமைத்து ஆறு மாதங்கள் சென்ற பின்னரும் அதே பல்லவியை அது தொடர்வது அபத்தம்.

தி.மு.க. ஆட்சிக்குப் பிறகு சல்லிக்காசில்லை என்றும், அதனால்தான் அ.தி.மு.க. வாக்களித்தபடி எந்தவொரு திட்டத்தையும் அமுல்படுத்த இயலாமல் போயிற்று என்றும் முதல்வர் பன்னீர்செல்வம் விளக்கம் அளித்ததுமில்லாமல், இந்தக் கொடூர நிதிநிலையையும் மீறி தமது அரசு செய்துள்ள நல்ல காரியங்களைப் பட்டியலிட்டிருக்கிறார்.

அந்தப் பட்டியலைப் பார்த்தாலே, தமிழக அரசின் இன்றைய நிதி நிலைமைக்கு என்ன காரணம் என்பது புரிந்து போகும்:

விவசாயக் கடன்களுக்கான வட்டித் தொகை 310.51 கோடி ரூபாய் அளவுக்கு ரத்து செய்யப்பட்டுவிட்டது. சென்னையில் தண்ணீர்ப் பிரச்னையைச் சமாளிக்க வெளியூர்களிலிருந்து ரயிலிலும் லாரியிலும் தண்ணீர் வரவழைக்கப்பட்டது - பலநூறு கோடிக் கணக்கில் இதற்கும் செலவு.

மாதந்தோறும் முந்நூறு டன் தேயிலையை, நீலகிரி விவசாயிகளிடமிருந்து வாங்கிச் சேர்த்துக் கொண்டிருக்கிறது அரசு. இதைப் பொது விநியோகத் திட்டம் மூலமாக விற்பனை செய்வதாக




ஏற்பாடு. தேனீர் அருந்தும் பழக்கம் குறைவாக உள்ள தமிழ்நாட்டில், இதன் மூலமாக என்ன லாபத்தைக் கண்டுவிட முடியும்?

உற்பத்திக்கு உதவாத செலவினங்கள் ஒரு பக்கம்; பலவீனமான பினாமி முதல்வர் இன்னொரு பக்கம்... நிர்வாகம் எவ்வாறு நடைபெறும்? அரசுக்கு வருமானம் எவ்வாறு பெருகும்?...

இதனால்தான் நிதி அமைச்சர் பொன்னையன், வருவாய் பெருக்க என்னென்ன செய்யப்பட்டுள்ளது என்று பட்டியலிடுவதற்குப் பதிலாக, தி.மு.க. ஆட்சியின் பேரில் குற்றப் பத்திரிகை படிக்கிறார். உலக வங்கியிடம் 1,150 கோடி கடனுக்கு விண்ணப்பிக்கிறார்!

வெறுங்கையை முழம் போட்டு வாசாலகம் செய்யும் தமிழக அரசுக்கு, பா.ம.க. தலைவர் ராமதாஸ் விடுத்துள்ள அறிக்கை சிறந்த வழிகாட்டல் என்றே சொல்லலாம்.

பொதுத் தேர்தலின்போது அ.தி.மு.க. அணியிலிருந்தாலும் தற்போது எதிர்க்கட்சிக் கூட்டணியில் இடம்பெற்றிருக்கிற ராமதாஸ், தமிழக அரசின் நிதி நிலைமை குறித்து ஒரு தகவல் அறிக்கை தயாரித்து வெளியிட்டுள்ளார். அவ்வறிக்கை என்ன செலவுகளை எவ்வாறு குறைக்கலாம் என்றும் ஆராய்ந்து கூறுகிறது:

- ஐம்பது முதல் நூறு ஏக்கர் வரை நிலமுடைய விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் வழங்குவதை நிறுத்த வேண்டும்.
- மானியங்கள் 'நிஜமான' ஏழைகளையே சென்றடைய வேண்டும்.
- பொது விநியோக முறையில் வழங்கப்படும் பொருள்களுக்கு, அவற்றை வாங்குவோரின் குடும்ப வருமானத்துக்கு ஏற்ப விலைகளை மாற்றி நிர்ணயிக்க வேண்டும்.
- அரசுக் கல்லூரிகளில் இடம் பெறுகிற மாணவர்களுள் வசதிபடைத்தவர்கள் கூடுதலான கட்டணம் செலுத்த வேண்டும்.
- பொதுத்துறை நிறுவனங்கள் நிர்வாகத்துக்கு, ஐ.ஏ.எஸ். அதிகாரிகளைக் காட்டிலும் இந்தியன் எகனாமிக் சர்வீஸ் பிரிவைச் சேர்ந்தவர்களைத் தலைவராக்குவது நல்லது.
- மின்வாரியத்தை முழுவதுமாகச் சீர்திருத்தி, மின் விநியோகத்தின்போது எழும் நஷ்டத்தைக் குறைக்க வேண்டும். மின்சாரத்தின் விலை நியாயமானதாக-அரசுக்குப் பெரும்




நஷ்டம் விளைவிக்காததாக இருக்க வேண்டும்.

- மின் உற்பத்தித் துறையில், தனியார் ஈடுபாடு அதிகரிப்பதற்கு ஆவன செய்ய வேண்டும்.
- நிர்வாகம் சீர்பெற வேண்டும்.
- உபரி தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புகள் ஏற்படுத்த வேண்டும்.
- பொதுத்துறை நிறுவனங்களின் கடன்களுக்கு அரசு அளிக்கும் காரன்டி, உச்சவரம்புக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும்.

இவ்வளவையும் எடுத்துச் சொன்ன ராமதாஸ், 'தி.மு.க. ஆட்சியின்போது வருவாய் குறைந்தது; செலவு எகிறியது; அதனால் நஷ்டம் விளைந்தது' என்ற வாதத்தை மறுத்தும் இருக்கிறார்.

மாறாக, தி.மு.க. ஆட்சியில் தேக்கநிலை என்பது தொடக்கத்திலிருந்தே இல்லை. சுறுசுறுப்பாகப் பல திட்டங்கள் சிறிதும் பெரிதுமாக அமுலாயின.

ராமதாஸின் அறிக்கையில் நடுநிலைமை இருப்பதை தமிழக அரசு ஏற்றாக வேண்டும்.

உலக வங்கியின் கதவுகளைத் தட்டிக் கொண்டேயிருந்தால் கடன் கிடைத்து விடக் கூடும்.

1,150 கோடி ரூபாய் தமிழக அரசு கேட்பது, பேருந்து வாங்கவும் குடிநீர்த் திட்டங்கள் போடவும்தான்! இதனால் வருவாய்ப் பெருக்கம் இருக்காது.

உலக வங்கிக் கடனைத் திருப்பிச் செலுத்துவதுடன் அதற்கான வட்டியும் செலுத்தியாக வேண்டும் என்கிற நிலையில், உற்பத்திப் பெருக்கம், வருவாய்ப் பெருக்கம் இன்றி அதை எவ்வாறு சாதிப்பது?

தமிழக அரசு வருவாய்த் துறையை முடுக்கிவிட்டு வரி வசூலில் கவனம் செலுத்தட்டும். தொழில் மேம்பாடு உற்பத்திப் பெருக்கம் ஆகியவற்றில் கவனம் செலுத்தி, வருமானத்தைப் பெருக்கும் வழியைப் பார்க்கட்டும்.

மாறாக 'தி.மு.க. ஆட்சி - கஜானா காலி' என்ற கோஷத்தையே இனியும் சொல்லிக் கொண்டிருந்தால், இது செயலற்ற அரசு, கையாலாகாத அரசு என்று ஒப்புக் கொண்டதாகி விடும். ○

# ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

## இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

மருத்துவத்தில் இன்று எத்தனையோ விஞ்ஞான முன்னேற்றங்கள் இருந்தாலும், குழந்தைச் செல்வம் உண்டாவது என்பது 'இறைவன் கொடுத்த வரம்' போல் ஆகி விட்டது.

''குழந்தைப்பேறு இல்லாத தம்பதியரில், குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, அவர்களை இயற்கையாகவே குழந்தை பேற்றுக்குத் தகுதி உள்ளவர்களாக ஆக்கும் – பக்க விளைவுகள் இல்லாத சிகிச்சை, நாங்கள் கடைப்பிடிக்கும் 'ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேதம்' என்ற முக்கூட்டு மருத்துவ முறையாகும்'' என்று கூறுகிறார் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னை வடபழனியில் 100 அடி சாலையில் கவுரி சங்கர் திருமண மண்டபம் எதிரிலும் சிகிச்சை நிலையங்கள் நடத்தி வரும் டாக்டர் ஏ. அர்ஜுனா.



• திருவண்ணாமலை மாவட்டத்தில் உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்ற ரங்கநாதன் - கீதா தம்பதியர். டாக்டர் A. அர்ஜுனா - டாக்டர் ஆண்டாள் அர்ஜுனாவுடன் உள்ளார்கள்.

''கடந்த 40 ஆண்டுகளுக்கும் மேலான என் மருத்துவ அனுபவத்தில் ஆயிரக்கணக்கான தம்பதியர்களுக்குச் சிகிச்சையளித்திருக்கிறேன்.

''என்னிடம் வரும் தம்பதியரில் ஆண்களில் 70 சதவிகிதம் பேரும், பெண்களில் 30 சதவிகிதம் பேரும் குறைபாடு உடையவர்களாக இருக்கிறார்கள்'' என்று விவரம் தெரிவித்தார் அர்ஜுனா.

குழந்தைப்பேறு இல்லாமல், குடும்பத்தில் பிரச்னைகள் ஏற்பட்ட காரணத்தால் தற்கொலைக்கு முயன்ற பெண்களை, தனது சிகிச்சை முறையில் தடுத்து நிறுத்தியிருப்பதாகக் கூறுகிறார் டாக்டர் அர்ஜுனா. அதுபோல், ''மனைவிக்குக் குழந்தை இல்லை என்பதற்காக மறுமணம் புரியவிருந்த கணவன்மார்களுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் குடும்பத்தில் குழந்தைச் செல்வம் உண்டாக்கி மகிழ்ச்சியூட்டியிருக்கிறேன்''என்கிறார் அவர்.

''எங்களிடம் வரும் தம்பதியரிடம் சிகிச்சைத் தொடங்கும் முன் கணவனின் உயிரணு உற்பத்திச் சரியாக இருக்கிறதா என்பதைக் கண்டறிய விந்துப் பரிசோதனை செய்யச் சொல்வோம். அதில் குறைபாடு இருந்தால் எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் சரியாகும் வரை அவர்களுக்குச் சில கட்டுப்பாடுகளுடன் சிகிச்சை அளித்து, உயிரணுக்கள் உற்பத்தி செய்து அணுக்களின் எண்ணிக்கை – உயிரோட்டத்தை அதிகரிக்கச் செய்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

சென்னை புளியந்தோப்பைச் சேர்ந்த, அறவே உயிரணு இல்லாத ரவி எங்களிடம் சிகிச்சை பெற வந்து 2 மாத முக்கூட்டு மருந்தில், நல்ல முறையில் உயிரணு உற்பத்தியாகியுள்ளது.

கோவை பெரியநாயக்கன் பாளையத்தைச் சேர்ந்த லோகநாதனுக்கு அறவே உயிரணு இல்லை. அவருக்கு ஒரே மாத முக்குட்டு மருந்தில் கவுண்ட் 110 மில்லியன், மொட்டிலிட்டி 20% உற்பத்தி ஆகியுள்ளது.

திருவாரூரைச் சேர்ந்த அறிவழகனுக்கு அறவே உயிரணு இல்லை. அவர் 7 மாதம் தொடர்ந்து முக்கூட்டு மருந்து சாப்பிட்டு உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு 16.6.2000ல் கவுண்ட் 20 மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. 13.7.2001ல் கவுண்ட் 60 மில்லியன், மொட்டிலிட்டு 50% என்று முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் திரூபாம்பேவாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. 28.12.2000ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் 26.1.2001ல் கவுண்ட் 92மில்லியன், மொட்டிலிட்டி 30% என்று உயர்ந்தது.

சென்னையைச் சேர்ந்த, உயிரணு குறைவாக இருந்த ரகுவுக்கு 6.5.2000ல் கவுண்ட் 29 மில்லியன், 50% மொட்டிலிட்டி இருந்தது. எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் அவருக்கு 20.8.2000ல் கவுணட் 160 மில்லியன் உயர்ந்தது.

இப்படி எங்கள் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையில் மேலே கண்டபடி உயிரணுக்களை உற்பத்தி செய்து புத்திர பாக்கியம் உண்டாக உதவி செய்கிறோம். முக்கூட்டு மருத்துவ சிகிச்சையில் நல்ல பலன் உண்டு.

**ஆண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள் :**

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்தாலும்,

விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், இந்திரிய நரம்புகள் இல்லாமல் பிறந்திருந்தாலும், அவர்களால் புத்திரபாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது.

சில ஆண்களுக்கு முறையற்ற சிற்றின்ப பழக்கங்கள், அதிகமான போதைப் பொருட்களின் பழக்கம், மற்றும் நீரிழிவு நோய் இருந்தாலும் குழந்தை பிறக்கச் செய்வதற்கான தகுதி இழந்து போகிறார்கள். அவர்களுக்கு எங்கள் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்ய முடியும்.

**பெண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள்:**

பெண்களின் பிரச்னைகளைப் பொறுத்தவரையில், வளர்ச்சியே இல்லாமல் இருக்கும் பெண்களின் கர்ப்பப்பையை வளர்ச்சியடையச் செய்கிறோம். சில பெண்களுக்கு வீட்டு விலக்கு ஒழுங்கில்லாமல் இருக்கும். அதை ஒழுங்குபடுத்துகிறோம். சில பெண்களுக்கு மாதந்தோறும் வீட்டு விலக்கின்போது சூதக வயிற்று வலி வரும். இதனால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையையும் எங்கள் முக்கூட்டு மருந்துகளால் குறைபாடுகளை நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்குக் கருமுட்டை உற்பத்தி இருக்காது. எங்கள் முக்கூட்டு மருத்துவத்தால் கருமுட்டை உண்டாக்கி, கருவுறச் செய்கிறோம். இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கரு முட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பெண்களுக்குள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி விடுகிறோம்.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று பலனின்றி தோல்வியுற்ற பின்னர் என்னிடம் வந்தார்கள். தம்பதியரில் இருவருக்கும் குறைபாடுகள் இருந்ததால், அவர்களுக்கு முக்கூட்டு மருந்து கொடுத்து சிகிச்சையளித்ததில், திருமதி ராஜாவுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துள்ளது.

பெங்களூரில் வசிக்கும் தம்பதியினருக்கு 20 ஆண்டு காலம் குழந்தை இல்லாமல் இருந்து முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் குழந்தை பிறந்துள்ளது. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரியும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்தது. பெண் குழந்தை பிறந்துள்ளது.

❍ விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.

❍ சென்னை, வடபழனி, கங்கையம்மன் கோயில் தெருவைச் சேர்ந்த, எங்களிடம் சிகிச்சைப் பெற்ற ஒரு முஸ்லீம் பெண்மணி தற்போது நிறைமாத கர்ப்பவதியாக உள்ளார்.

❍ தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் - வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.

❍ பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள்.

❍ சென்னை வியாசர்பாடியைச் சேர்ந்த சுப்புலட்சுமி என்ற ஸ்டாஃப் நர்ஸுக்கு முக்கூட்டு சிகிச்சையினால் சமீபத்தில் குழந்தை பிறந்துள்ளது.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு.

ஒரு ஜாதி மருந்துகளால் உருவாகும் கரு, வேறொரு ஜாதி மருந்தினால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அதனால் பிரசவம் ஆகும் வரை உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் சுகப்பிரசவம் ஏற்படும் என்றார் டாக்டர் அர்ஜுனா. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திர பாக்கியம் அடைய டாக்டர் ஏ. அர்ஜுனா, அவரது மனைவி டாக்டர். வி.ஏ.ஆண்டாள் அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா** ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி

சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் நெ.9 (புதிய எண் 65) நெற்குன்றம் பாதை, (டிஎஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் : 4833464 எஸ்டிடி. 044

செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரைச் சந்திக்குமிடம் –

வீடு : நெ. 30, பிராமணர் தெரு, ஈஸ்வரன் கோயில் அருகில், வந்தவாசி,

திருவண்ணாமலை மாவட்டம் – 604 408 போன் : 25208, 26180 எஸ்டிடி. 04183

ADVT

காதில் விழுந்தவை:

# அமைச்சர்களுக்கு அர்ச்சனை!

● 'அ.இ.அ.தி.மு.க, தி.மு.க ஆகிய கட்சிகளுக்கு அடுத்தபடியாக தனியாகப் போட்டியிட்ட எங்களுக்குக் கிடைத்ததுதான் கௌரவமான வெற்றி' என்று ம.தி.மு.க செயலாளர் வைகோ சொல்வதை தி.மு.க.வில் கிண்டல் செய்கிறார்கள்.

"1996ல் ஏழு நகர சபைகளில் ம.தி.மு.க, தலைவர் பொறுப்பை வென்றது. இப்போது பட்டுக்கோட்டை, குளித்தலை ஆகிய நகரசபைகளைதான் வென்றிருக்கிறது. அதுவும் போட்டியிட்டவர்களின் தனிப்பட்ட செல்வாக்குதான் காரணம். அதேபோல் 23 டவுன் பஞ்சாயத்துகள் கைவசம் இருந்தன. இப்போது ம.தி.மு.கவுக்கு பதிமூன்றுதான் கிடைத்துள்ளன. அவரது சிவகாசி பாராளுமன்றத் தொகுதியில் இருக்கும் ஏழு நகராட்சிகளில் ஒன்றைக் கூட ம.தி.மு.க கைப்பற்றவில்லை. இத்தனைக்கும் அந்தத் தொகுதியில் தீவிரமாகப் பிரசாரம் செய்தார் வைகோ. சென்ற சட்டமன்றத் தேர்தலில் சங்கரன்கோயில் தொகுதியைக் கொடுக்கவில்லை என்றுதான் கூட்டணியை விட்டு விலகிப் போனதாகச் சொன்னார். ஆனால் அங்கு நகரசபையிலும், யூனியனிலும் அவருக்குத் தோல்விதான். புதூர், வெம்பக்கோட்டை போன்ற யூனியன்களையும் இழந்திருக்கிறார். மேயருக்காக போட்டியிட்ட இடங்களிலும் வாங்கிய வோட்டுக்கள் மிகவும் குறைவு. இந்த நிலையில் எப்படி 'கௌரவமான வெற்றி' என்று கேட்கிறார்கள் தி.மு.க உடன் பிறப்புகள்.

● தென் சென்னை தொகுதி அ.இ.அ.தி.மு.க செயலாளராக நியமிக்கப்பட்ட கராத்தே தியாகராஜனுக்கு, துணை மேயர் வாய்ப்பும் கொடுக்கப்பட்டது. சசிகலாவின் முழு ஆதரவு பெற்ற தியாகராஜன் இரண்டு பதவிகளிலும் நீடித்திருப்பார் என்று எதிர்பார்த்து இருந்த நிலையில் 'கராத்தே'விடமிருந்து மாவட்டச் செயலாளர் பதவியைப் பிடுங்கி, சமீபத்தில் மீண்டும் கட்சியில் இணைந்த சைதை துரைசாமியிடம் கொடுத்துவிட்டார் ஜெ. சைதை தொகுதியில் இடைத்தேர்தல் வரும் நிலையில் துரைசாமி அ.இ.அ.தி.மு.க வேட்பாளராக அங்கு நிறுத்தப்படுவார்' என்கிறார்கள்.

● கடுமையான நிதி நெருக்கடியில் சிக்கித் தவிக்கிறது தமிழக அரசு. 'என்னதான் பின்னணியில் இருந்து செயல்பட்டாலும் நேரடியாக களத்தில் இறங்க முடியாததால் முள்ளின் மேல் நிற்பது போல் இருக்கிறார் ஜெ. போதாததற்கு அமைச்சர்கள் பொன்னையன் உட்பட யாருடைய செயல்பாடும் அவருக்குத் திருப்தியாக இல்லையாம். நிர்வாகத் துறையில் அனுபவம் பெற்றவர்கள் கட்சியில் இல்லாததைப் பெரிய இழப்பாகக் கருதுகிறாராம். சமீபத்தில் சுமார் டஜன் அமைச்சர்களுக்கு, போயஸ் கார்டனில் 'அர்ச்சனை' நடந்தது என்கிறார்கள்.

— சஞ்சயன்

புதுயுக யோகா 7

# எல்லாமே தலைகீழ்!

விபரீதகரணி! பயப்படுகிற மாதிரி ஒரு பெயர்! அவ்வளவுதான். 'விபரீத' என்றால் தலைகீழ் என்று பொருள். 'கரணி' என்றால் செயல்பாடு என்று அர்த்தம். நமது உடலை, தலைகீழாகப் புவியீர்ப்பு சக்தியை நோக்கி வைப்பதால் உடல் உறுப்புகள் வலிமை பெறுகின்றன. முத்திரைப் பயிற்சியே ஆசனமாக வருவதால் பலன்கள் அதிகம்.

சிரசாசனத்துக்கு இணையான பலன்களைத் தருகிற ஆனால் அவ்வளவு சிரமமில்லாத ஓர் ஆசனம். குறைந்தபட்சம் முப்பது விநாடிகளிலிருந்து நீண்ட காலப் பயிற்சிக்குப் பிறகு அரைமணி நேரம் வரை கூடச் செய்யலாம்.

| இந்த வார யோகா மொழி |
|---|
| விபரீதகரணி ஆசனம் ஆரோக்கியத்தின் அற்புத சாசனம் |

**பலன்களின் பட்டியல்**

• தைராய்டு சுரப்பியில் அதிக ரத்தம் பாய்வதால் தேவையான அளவு 'தைராக்ஸின்' சுரந்து ரத்தத்தில் கலக்கிறது.

• புவியீர்ப்பு சக்தியால், தலையிலிருக்கும் பீனியல் பிட்யூட்டரி சுரப்பிகளும் 'பிட்யூட்டரின்' எனும் மருந்தும் என்ன வேலை செய்யுமோ அதை இந்த ஆசனம் செய்து விடுகிறது.

• முதுகுத் தண்டின் மையத்திலுள்ள ஒருவித திரவம், இந்த ஆசனத்தால் அதிக வேகமடைகிறது. அதனால் மெடுல்லா பாகத்தில் வந்து முடியும் சிம்பதடிக் நரம்புகளும், வேகஸ் நரம்புகளும் சுறுசுறுப்படைகின்றன.

• அட்ரீனல் சுரப்பியில் தலைகீழ் நிலையில் வயிற்றில் அழுத்தம் ஏற்படுவதால், அதன் ஹார்மோனும் அதிகமாக இரத்தத்தில் கலக்கிறது. எனவே அட்ரீனலின் மருந்தின் வேலை. இயற்கையாக நடைபெறுகிறது.

• பிராணவாயு கூட்டினால் நுரையீரல்களிலுள்ள காற்றுக் குழாயின் இறுக்கம் தளர்த்தப்படுகிறது.

• அதிக இரத்தத்தை இதயத்துக்கு அனுப்புகிறது.

• முகப்பொலிவு ஏற்படுத்தும்.

• தலைசுற்றல், தலைவலி போக்கும்.

• அஜீரணத்தைப் போக்கும்.

• அடி முதுகுவலி, கழுத்து வலி, முதுகுத் தண்டு கோளாறுகள் குணமாகும்.

நரம்பு மண்டலம், மூளை மண்டலம், ஐம்புலன்கள் ஆகியவற்றைப் பலப்படுத்துகிறது.

• தொடர்ந்து மற்ற ஆசனங்கள், பிராணாயாமம், கிரியை பயிற்சிகளுடன் இவ்வாசனத்தைச் செய்து வந்தால், ஆஸ்துமா, இருமல், மார்புச்சளி, ஜலதோஷம், மூக்கடைப்பு, அதிக ரத்த அழுத்தம், நீரிழிவு ஆகிய நோய்கள் குண

டாக்டர். ஏ.எஸ். அசோக்குமார்

மடைகின்றன.

**எப்படிச் செய்வது?**

1. விரிப்பின் மீது 3 அல்லது 4 இலவம் பஞ்சு தலையணைகளை அடுக்கி வைக்கவும்.

2. தலையணையின் மீது மையத்தில் அமராமல், முன் பகுதி நுனிக்கும் மையப் பகுதிக்கும் இடையில் அமரவும்.

3. மெதுவாகப் பின்னால் வளைந்து, கைகளைத் தரையில் வைத்து, ஊன்றிப் படுத்து உச்சந்தலையை விரிப்பின் மீது வைக்கவும்.

4. கால்களை ஒன்று சேர்த்து மேலே உயர்த்தவும். அதே சமயத்தில் தலையை நகர்த்தி, தோள் பட்டைகளை விரிப்பின் மீது வைக்கவும்.

5. கால்களை 90°க்கு நீட்டிக் கொண்டு வரவும். உடல் கனம் முழுவதும் தோள் பட்டை கழுத்தில் இருக்கும்படி வைக்கவும். கைகளைச் சாதாரணமாக தலையணைக்குப் பக்கத்தில் வைக்கவும்.

6. சாதாரண மூச்சில் 100 எண்ணிக்கை இருக்கவும். முடிந்ததும், கால்களைக் கீழே கொண்டு வந்து தரையில் வைக்கவும்.

சிறிது ஓய்வு எடுக்கவும்.

7. திரும்பவும் கால்களை உயர்த்தி 100 எண்ணிக்கை செய்யவும். இது போல 15 தடவை அதாவது 1500 எண்ணிக்கை சராசரி 15 நிமிடங்கள் செய்யலாம்.

8. கால் விரல்களை ஊன்றி குதிகாலை உயர்த்தி, திரும்பவும் கால் விரல்களை ஊன்றி முதுகை உயர்த்தவும். இப்போது தலையணைகளை ஒன்றன் பின் ஒன்றாக பக்கவாட்டில் பிடித்து வெளியே எடுத்துப் போட வேண்டும்.

9. மெதுவாக முதுகை விரிப்பின்மீது வைத்து கால்களை நீட்டி சலபாசனத்துக்கு வரவும்.



**குறிப்புகள் :**

1. மூன்று மாதப் பயிற்சிக்குப் பின் தொடர்ந்து 15 நிமிடங்கள் கால்களை உயர்த்தியிருந்து செய்யலாம்.

2. பகலில் 200 எண்ணிக்கைக்கு மேல் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் பகலில் தூக்கம் வரும்.

3. இரவு சாப்பாடுக்கு முன் வெறும் வயிற்றில் 15 நிமிடங்கள் செய்து விட்டு, 20 நிமிடங்கள் கழித்து சாப்பிட்டு விட்டு, ஒரு தம்ளர் சூடாக தண்ணீர் குடித்து விட்டு படுத்தால் இரவில் அமைதியான, ஆழ்ந்த நித்திரை ஏற்படும். மனக் கவலைகளாலும், நோய்களின் தீவிரத்தாலும் தூக்கம் வராமல், தூக்க மாத்திரையை நாடுபவர்களுக்கு, விபரீத கரணி மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

4. மொஸைக் தரையில் பயிற்சி செய்பவர்கள் தக்க பாதுகாப்புடன் செய்யவும்.

5. இடுப்பில் கை வைத்து பயிற்சி செய்யக் கூடாது. அதனால் கால்களை 90°க்கும் இடுப்பை 45°க்கும் பயிற்சி முடியும் வரை சரியாக வைத்திருக்க முடியாது. அப்படிச் செய்வதால் முதுகுவலி ஏற்படும். அதிக நேரமும் செய்ய முடியாது.

6. தலையணையை வைத்து செய்வதுதான் பாதுகாப்பானது; அதிக பலன் தரக்கூடியது.

7. பயிற்சி செய்ய நேரமில்லாதவர்கள், அடி முதுகுவலி, கழுத்துவலி, நீரிழிவு நோய், ஆஸ்துமா, தலைவலி, அதிக இரத்த அழுத்தம் உடைய நோயாளிகள் இந்த ஓர் ஆசனத்தை மட்டும் இரவில் செய்து வந்தால், நோய்களும் வலிகளும் கட்டுப்பாட்டில் இருக்கும்.

8. கிழவனைக் குமரனாக்கும் ஆசனம் என்று யோக நூலில் சொல்லப்பட்டிருக்கும் இந்த ஆசனத்திற்கு நாங்கள் வைத்திருக்கும் பெயர் சகலரோக நிவாரணி!

அப்ப, அடுத்த வாரம்!

படம் : ஸ்ரீஹரி

**எச்சரிக்கை : இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.**

**'சாதிக்கணும்' என்று வெறியோடு சினிமாவுக்குள் நுழைந்தவர்களிடம் 'உங்கள் செலுலாய்டு கனவு நனவாகி விட்டதா?' என்று கேட்டபோது....**







பார்த்திபன் : இ...ல்...லை... இ...ன்...னு...ம்!

அர்ச்சனா : நான் சினிமாவில் காலடி வைக்கும்போது கனவுகளோடுதான் வந்தேன். அந்தக் கனவுகளுக்குள் செலுலாய்டும், வண்ண செலுலாய்டுக்குள் என் இனிய கற்பனைகளும் சேர்ந்தே விரிந்திருந்தன. அவற்றை நனவாக்குகிற விதத்தில் வாய்த்த வாய்ப்புகளும் வரங்களாகவே அமைந்தன.

ஓர் உதாரணம், 'இரட்டை வால் குருவி' படத்தில் என் கேரக்டர் ஒரு ஹவுஸ் வொய்ஃப். ஆனால் அதுவும் ஓர் ஆர்டிஸ்ட்டுக்கான கேரக்டராகவே அமைந்தது.

சில மதிப்புக்குரிய வாய்ப்புகளை மட்டும் நான் பிடிவாதமாக இருந்து ஏற்றுக் கொண்டேன். அவையும் என் கனவுகளுக்குத் தீனி போட்டன. சிலர் நூறு படங்கள் நடித்திருக்கலாம். ஆனால் அமைகிற படங்கள் ஆத்மதிருப்தி தரும் நல்ல படங்களாக இருக்காது. ஆனால் என்னைப் பொறுத்தவரை எல்லா மொழிகளிலும் இரண்டு மூன்று படத்திலாவது நினைவில் வைத்திருக்கும்படியான விஷயங்களைப் பதிவு பண்ணி இருக்கிறேன்.

என் செலுலாய்டு கனவும், நிஜ வாழ்க்கையில் நான் கண்ட கனவும் சேர்ந்தே நிறைவேறியது ஆச்சரியமான உண்மை.

எனக்கே எனக்கென்று, சிறிய, அழகான வீடு கட்ட வேண்டுமென்று ஆசை இருந்தது. 'வீடு' படம் போல, நிஜத்தில் நான் வீடு கட்டிய போது, அந்தப் படத்தில் என் பாத்திரம் பட்ட ஏமாற்றங்கள், சிரமங்களை, உண்மையில் சந்தித்தேன். ஆனாலும் என் கனவு பலித்தது.

என் படங்கள் சின்னதாக இருக்கலாம். ஆனால் அவை சித்திரங்கள். விமானத்திலிருந்து பார்க்கிற வீடுகளைப் போல, இந்தச் சித்திரமும் ஒரு சின்னச் செதுக்கல்தான். ஆனால் அதற்குள் என் திருப்தி சாம்ராஜ்ஜியம் பலித்துக் கிடக்கிறது.

சேரன் : சினிமாவுக்குள் பிரவேசிக்கும்போது பெருசா சாதிப்போம் என்கிற கனவு இருந்தது.

கனவில் யாருக்குமே எதிரிகள் கிடையாதே?!

அதனால் கனவு காணும் போது





# செலுலாய்டு கனவு!

யோசித்த அத்தனையும் எளிதாக நிறைவேறும் என்கிற நம்பிக்கை இருந்தது. ஆனால் இப்போது நிறைய எதிரிகளை மீறி ஜெயிக்க வேண்டியதாக இருக்கிறது. என் கனவை நனவாக்க பெரும் பிரயத்தனம் செய்ய வேண்டியிருக்கிறது.

நம் கனவுகளில் ஒரு வெற்றிக்கும், அடுத்த வெற்றிக்கும் இடையில் இடைவெளி இருக்காது. ஆனால் நனவாக்க முயற்சிக்கும் வெளியில்.... ஒரு படம் முடிந்து, அடுத்த படத்துக்குள் ட்ரெண்ட் மாறி விடுகிறது. மக்களின் ரசனை மாறுகிறது. அதைப் புரிந்து கொண்டு பூர்த்தி செய்வது கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருக்கிறது.

ஆனால் ஒரு விஷயம். கனவுகளில் சாத்தியப்படாத விஷயங்கள் நினைவில், நனவில் இருக்கிறது நம்பிக்கையாக!

நாம் எப்படியாவது உலகத் தரத்தில் ஒரு சினிமா பண்ணுவோம். நம்முடைய பண்பாட்டைப் பிரதிபலிக்கிற விஷயங்களைக் கொண்டு வருவோம். ஒரு கனவுக் கதாநாயகன் வாழ்வைச் சொல்லாமல், ஒரு நிஜ மனிதனின் வாழ்வைப் பிரதிபலிக்கக்கூடிய விதத்தில் படம், பண்ண வேண்டுமென்கிற கனவு இன்னும் இருக்கிறது.

இந்த இரண்டாயிரத்து ஒன்றில் அந்தக் கனவு நனவாகாமல் இருந்தாலும், 2010 லாவது அதை அடைவேன் என்கிற மற்றொரு கனவு இருக்கிறது.

**லிவிங்ஸ்டன் :** கனவுகளுக்கு எல்லையே கிடையாது. நம்முடைய எண்ணங்கள்தான் வாழ்க்கை. முதன் முதலில் சினிமாத் துறைக்குள் ஒரு மியூசிக் டைரக்டராகணும் என்கிற ஆசையோடு வந்தேன். ஆனால் எனக்கு நடிக்கத்தான் அதிக வாய்ப்புகள் கிடைத்தன. நடித்தேன்.

நம்முடைய எண்ணங்களின் வீச்சும், பலமும் எவ்வளவு உறுதியாக இருக்கிறதோ, அந்தளவுக்கு நம் கனவுகளும், அதனை உண்மையாக்கும் முயற்சிகளும், அதற்கான தகுதிகளும் வளரும்.

ஆசைப்படுவது மட்டும் போதாது. தகுதிகளும் வேண்டும். சினிமாவில் நிரந்தரத் தோல்வி என்பதே கிடையாது. ஏதோ ஒரு தகுதியை வைத்து முயற்சிகள் செய்து கொண்டே இருப்போம்.

ஒரு ஹீரோவாக நான் நடித்தபோது கிண்டல் பண்ணினாங்க. என் நலம் விரும்பிகள், 'வில்லனா நடிச்சு, நாலு காசு பார்க்கறது, உனக்குப் பிடிக்கலையா? கிடைக்கிறதை விட்டுட்டுப் பறக்கறதைப் பிடிக்க நினைச்சுக்காதே'ன்னு அட்வைஸ் பண்ணாங்க. ஆனால் என் உள் மனத்தில், என்னைக் கதாநாயகனாக மக்கள் ஏற்றுக் கொண்டதாகக் கனவு கண்டேன். ஜெயிச்சேன்.

ஓர் உண்மையான கலைஞனுக்குத் திருப்தியே வராது.

ஒரு நிலைக்கு வந்த பின்னாலும், அதற்கு அடுத்த நிலைக்குச் செல்ல போராடிக் கொண்டே இருப்பான். நானும் அப்படித் தான்.

என் முதல் கனவை நோக்கி, கிடைத்த சதுரங்களில் கால் வைத்து ஆடிக் கொண்டே இருக்கிறேன்.

ஸ்பீல்பெர்க்கிடம், 'எப்ப ஷூட்டிங் ஆரம்பிக்கப் போறீங்க?'னு' கேட்டால் 'படம் 99% முடிஞ்சிடுச்சி'னு சொல் வாராம். ஏன்னா, அவர் மனசுக்குள்ளேயே படத்தை யோசித்து, கனவு கண்டு, பிரேம் பிரேமாக எடிட் பண்ணி ஒரு முழு படத்தையே உருவாக்கி வைத்திருப்பார்.

அதே போல எனக்கும், என் மியூசிக் டைரக்டர் கனவு, நனவாக ஒரு பர்ஸன்ட் பாக்கி இருக்கு. என் மனசுக்குள் ஓர் இசை அமைப்பாளரை கனவு கண்டு விட்டேன். அது நிறைவேற காத்துக் கொண்டிருக்கிறேன்.

**டெல்லிகணேஷ்** : எத்தனையோ காரெக்டர்ஸ். விதவிதமான பாத்திரங் களில் நடித்து விட்டேன். ஆனாலும் 'டைரக்ஷன் செய்ய வேண்டும்' என்ற ஆசை, என் மனத்தின் ஏதோ மூலை யில் நச்சரித்துக் கொண்டேயிருந்தது. சில வருஷங்களுக்கு முன் யதேச்சையாக ஒரு வாய்ப்பும் வந்தது. டைரக்டர் அஸ்வின் குமார் யூனிட்டுடன், முண்டந்துரை சர ணாலயத்தில் ஷூட்டிங். குட்டி பத் மினியும் இருந்தார். ஷூட்டிங் எல்லாம் முடிந்து கிளைமாக்ஸ் மட்டும் பாக்கி யிருந்த நிலையில், அஸ்வின்குமாருக்கு உடம்பு சரியில்லாமல் போய்விட்டது. 'ஷூட்டிங் கேன்சல் ஆனால், மறுபடி லொகேஷன் தேடி வர வேண்டும். கால் ஷீட் பிரச்னை வரும். தயாரிப்பாளருக்கு வீண் செலவு. எல்லாருக்குமே சிரமம்' என்ற நிலையில், நானே கிளைமாக்ஸை எடுத்துத் தருவதாக ஒப்புக்கொண்டேன். மிக நன்றாக இயக்கியிருப்பதாக பாராட்டு வந்ததும் என் செலுலாயிடு கனவு ஓரளவு பூர்த்தியானதாக நினைத்தேன்.

எனக்கே நிறைவு வரும்படியாக டைரக்ட் செய்தது 'செல்லம்மாள்' டீவி தொடரில்தான். அதைத் தொடர்ந்து 'பல் லாங்குழி' டீ.வி. தொடரும் வெற்றி பெறவே, சந்தோஷத் திருப்தி ஏற்பட்டது. நடிகனாக ஒரு கதாபாத்திரத்தில் நடிப்பதை விட, டைரக்டராகப் பணியாற் றுவது சிரமமான வேலை எனப் புரிந்தது. எல்லாத் துறைகளிலும் உள்ள நுணுக்கங் களைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். அதுதான் தினமும் என்னை டெக்னிக லாக மேம்படுத்திக் கொண்டேயிருக் கிறேன். கற்றது கையளவு என்பார்களே, என்னைப் பொறுத்தவரை, என் செலு லாய்டு கனவுகளைப் பொறுத்தவரை, அதுதான் நிஜம். நான் இன்னும் கற்றுக் கொண்டேயிருக்கிறேன்.

**சீமா** : நான் நடிக்கத் தொடங்கிய போது எனக்கு பதினாலு வயசு. ஒரு மேடை நிகழ்ச்சியில் என்னுடைய நடனத் தைப் பார்த்து டைரக்டர் ஐ.வி. சசி 'அவளுடைய ராவுகள்' படத்தில் அறிமுகப்படுத்தினார். ஒரே இரவில் நான்

"பின்லேடனுக்குப் பிடிக்காத வெடி எது?"

"புஷ்வாணம்!"

— திருவாரூர் சரோ





"நிச்சயமா நாலு பேரோட வேலைக் காவது மானேஜர் வேட்டு வைக்கப் போறார்னு நினைக்கிறேன்..."

"எதனால சொல்றே?"

"அவரோட டேபிள்ல ஏகப்பட்ட ஒற்றை வெடி அடுக்கி வைச்சிருக்காரு!"

— ஆரூர் சரோ

தாரகையாகி விட்டேன். 'சீமே... சீமே' என்று கேரளா ரசிகர்களின் கனவுக்கன்னி ஆன போதும் கூட, எனக்கென்று எந்தவித செலுலாயிடு கனவும் இருக்கவில்லை.

எனக்குள் கனவு விதைகளை விதைத்து, மிக அழகாகப் பதியம் போட்டவர் என் கணவர் ஐ.வி. சசி. அந்தக் கனவுகளின் தீட்சண்யம் தந்த பரபரப்பில் கிட்டத்தட்ட முந்நூறு படங்கள் நடித்தேன். நடுவே இடைவெளி விழுந்த போதும், என் கனவுகள் துளிர்விட்டுக் கொண்டேதான் இருந்தன.

நீ... நீண்ட இடைவெளிக்குப் பிறகு 'ஜன்னல்' டி.வி. தொடரில் நடிக்க வாய்ப்பு கிடைத்த போது, எனக்கு தயக்கமாகவும், பயமாகவும் இருந்தது. "அபயம் மாமி கேரக்டருக்கு நீ பொருத்தமாக இருப்பாய்; உன்னால் முடியும்'' என்று பாலசந்தர் ஸார் உற்சாகமூட்டி என்னுடைய செலுலாயிடு கனவுகளுக்கு உரம் போட்டு விட்டார். அந்தச் சமயத்தில் 'அன்புள்ள சிநேகிதியே'வில் நடிக்க வாய்ப்பு கிடைத்ததும், விரும்பி ஏற்றுக் கொண்டேன். 'பார்த்தாலே பரவசம்' படத்திலும் நடிக்கிறேன். அதைப் பார்த்துவிட்டு மலையாள சீரியல்களிலும் நடிக்க வாய்ப்புகள் வந்துள்ளன.

'சீமே'யின் கனவுகள் விஸ்தரித்துக் கொண்டே போகின்றன. ஒரு கனவு நனவாகும் போது, இன்னொரு கனவு புதிதாக!

**- எஸ். ஜென்னி,**
**லட்சுமி ஸ்ரீனிவாஸன்**



# பட்ட மரம் நட்ட கதை!

கமல்ஹாசன் நடித்த 'மருதநாயகம்' படப்பிடிப்பு, காரைக்குடி அருகே குன்றக்குடியில் நடந்தது. மருதநாயகத்தின் உறவினர்கள் பட்டமரத்தில் தூக்கில் தொங்குவது போன்ற ஒரு காட்சிக்கு ஆர்ட் டைரக்டர் 'சாபுசிரில்' பட்டுப்போன ஒரிஜினல் புளியமரத்தைப் பயன்படுத்த விரும்பினார்.



மூன்று கி.மீ தொலைவில் ஒரு கிராமத்தில் பட்டுப்போன புளியமரம் விலை பேசப்பட்டு கிளைகளுடன் அப்படியே தோண்டி எடுத்து வரப்பட்டது. அதை மீண்டும் நட்டு படப்பிடிப்பு நடத்தினார்கள். அப்படி நடப்பட்ட புளியமரத்தின் எஞ்சிய பகுதியின் இன்றைய நிலைதான் இது.

புளிய மரத்தைச் சிதையாது கொண்டு வர எடுத்துக் கொண்ட முயற்சியின் போது சாலை ஓரங்களில் இருந்த மைல் கற்கள் பெயர்க்கப்பட்டும், மின்சாரக் கம்பிகள் அறுந்தும் போயின. அதற்கெல்லாம் உரிய செலவுத் தொகையை அந்தந்தத் துறையில் செலுத்தி விட்டனர் ராஜ்கமல் பிலிம்ஸார். இந்தப் புளியமரம் நடும் செலவு மட்டுமே சுமார் ஐம்பதாயிரம் ஆனதாம்!

**— கி. சிங்காரவடிவேல்**



# நடிக்கலாம் வாங்க!

தரமணி திரைப்படக் கல்லூரியின் நடிப்புத் துறைக்குப் போட்டியாக வந்திருக்கிறது மேஜிக் லேண்டர்ன் ஆக்டர்ஸ் ஸ்டூடியோ. அமரர் கல்கியின் பொன்னியின் செல்வனை மேடைக்குக் கொண்டு வந்த அதே மேஜிக் லாண்டர்ன்தான்.

சினிமா மற்றும் தொலைக்காட்சித் தொடர்களுக்கு நடிகர்களின் தேவை அதிகரித்து வருவதைத் திறமையாக மோப்பம் பிடித்து, பன்னிரண்டு வார நடிப்புப் பயிற்சி அளிக்கத் தொடங்கி இருக்கிறார்கள். மாலை ஏழு முதல் இரவு ஒன்பது முப்பது மணி வரை (வேலைக்குப் போகிறவர்களுக்கு வசதியாக) பயிற்சி நேரம். பயிற்சியின்போது, காட்சிகளைக் கையில் கொடுத்து, கேமிரா முன்பு நடிக்கச் சொல்கிறார். முதல் நாள் தொடங்கி கடைசிநாள் வரை செய்முறை தான். இந்தப் பயிற்சியின் முக்கிய அங்கமாக நடனம், சண்டை போன்றவையும் உண்டு. முதல் கோர்ஸில் பயிற்சி முடித்த நடிகர், நடிகைகளைக் கொண்டு எடுத்திருந்த, 'புதிர்' என்றொரு குறும்படத்தைப் பார்த்தபோது, நம்பமுடியவில்லை. அதில் நடித்திருந்த எல்லோரும் பாத்திரத்தை உணர்ந்து, ஓவர் ஆக்ட் செய்யாமல் நடித்திருந்தது மேஜிக் லாண்டர்னின் உழைப்புக்கு எடுத்துக்காட்டியது.

முதல் கோர்ஸில் நடிப்புப் பயிற்சி பெற்றிருக்கும் மயன், சிவில் இன்ஜினியர். ''வாழ்க்கையை நகர்த்துவதற்கு, கையில் வேலையிருக்கிறது. நடிப்பின் மீது தீராத தாகம். வெளியே சென்று வாய்ப்புத் தேடுவதற்கு முன்பு, நடிப்பைப் பற்றி கொஞ்சமாவது தெரிந்துகொண்டு செய்யலாமே என்று இந்தப் பயிற்சியில் சேர்ந்தேன். இப்போது பெரிதாய் சாதித்து விடலாம் என்ற நம்பிக்கை வந்துவிட்டது'' என்கிறார்.

ஒரு கோர்ஸில் பத்து மாணவர்களை மட்டுமே சேர்த்துக் கொள்கிறார்கள் என்பதும்கூட மேஜிக் லாண்டர்ன் நடிப்புப் பயிற்சியின் சிறப்புதான். ஆனால் பயிற்சிக்கட்டணத்தைக் கொஞ்சம் குறைக்கக்கூடாதுங்களா? பத்து ரூபாயோடு பஸ் ஏறி சென்னை வர்றவங்களுக்கும் உங்கப் பயிற்சி உதவுமே!

- ஜெ



• மயன்

"சில மாடல்களைப் பார்த்தா,
பொறாமையா இருக்கும்!
இப்போ, என்னைப் பார்த்தா
நிறைய கண்கள்ல
பொறாமை!"

இதே போல் உங்கள்
உடல் எடை குறைய
தொடர்பு கொள்ளுங்கள்

ஹேர் ட்ரீட்மெண்ட்



மூன்றே மணி நேரங்களில் அதிசயிக்க
தொழில்நுட்பத்தின் மூலம் மாற்றுமுடி
பொருத்துதல் மற்றும் ஒட்டமைப்பு

வாரத்தில் 7 நாட்களும்
காலை 8.00 மணி முதல்
மாலை 8.00 மணி வரை
முன்பதிவு செய்தவர்களுக்கு மட்டுமே.

இந்த முறையின் மூலம்
30 கிலோ வரை
எடை குறைக்கலாம்

விஞ்ஞானப்பூர்வமான அழகு சிகிச்சை

- எடை குறைப்பு • முகம் மற்றும் மார்பக மேம்பாடு
- கருவளையம் அகற்றுதல் • முடி உதிர்வதை தவிர்த்தல்
- உடல் சீரமைப்பு • தாடை சதை குறைப்பு
- பொடுகு அகற்றுதல் • முடி ஒட்டுதல்
- முகப்பரு மற்றும் கரும்புள்ளி அகற்றுதல்

உடல் பருமனுக்கான
கம்ப்யூட்டரைஸ்ட்
பாடி ஸ்கேன்
ரூ.500/- மட்டுமே.



**BODY FOCUS**

ஆரோக்கியத்தை இழக்காமல் உடல் எடையை குறையுங்கள்.

105, ஹாரிங்டன் சாலை, சேத்துப்பட்டு, சென்னை – 31. போன் : 8220044, 8220055
3157, 12வது மெயின், இந்திரா நகர், (இ.எஸ்.ஐ. மருத்துவமனை மெயின் கேட் எதிரில்)
பெங்களூர்–38. போன் : 5214655 / 5214656
229, விவேகானந்தா ரோடு, ராம் நகர், கோயம்புத்தூர் – 641 009.
போன் : 236594, 232209

# 'கா

ளிதாஸ்' – முதல் தமிழ் பேசும் படம். 1931ல் ரிலீஸ்! அதை கணக்கு வைத்துப் பார்த்தால் தமிழ்த் திரை உலகுக்கு வயது எழுபது! 'ஸ்வீட் 70' என வாழ்த்தி இதோ சில சினி துளிகள்!

● தென்னிந்தியாவின் முதல் திரைப்படக் காட்சி நடந்த இடம் சென்னை 'விக்டோரியா பப்ளிக் ஹால்' (வி.பி.ஹால்) சென்ட்ரல் ஸ்டேஷனுக்கும் 'ரிப்பன்' கட்டடத்துக்கும் இடையில் இன்றளவும் உள்ளது. அங்கு 7.7.1897 அன்று 'லூமியே சகோதரர்கள்' தயாரித்த உலகின் முதல் மௌனப் படங்கள் திரையிடப்பட்டன.



' பராசக்தி' படப்பிடிப்பில்...

● சென்னையில் டிக்கெட் கொடுக்கப்பட்டு தொடர்ந்து மௌனப் படங்கள் திரையிடப்பட்ட முதல் நிரந்தர திரையரங்கம் அண்ணா சாலையில் இருந்த 'எலக்ட்ரிக் தியேட்டர்'. அதை நிறுவியர் 'வார்விக் மேஜர்' என்ற ஆங்கிலேயர். அந்தத் திரையரங்கம் இப்போது இல்லை; ஆனால் அந்தக் கட்டடம் இருக்கிறது. அண்ணா சாலை தபால் நிலைய வளாகத்தில் அஞ்சல் துறை கொடவுனாக இருக்கிறது.

● சென்னையில் இன்றளவும் இயங்கி வரும் மிகப் பழைமையான திரையரங்கம் 'கெயிட்டி'. 1913 ஆம் ஆண்டில் கொல்கத்தாவைச் சேர்ந்த 'மதன்' என்பவரால் கட்டப்பட்டது.

● சென்னையில் முதல் 'டூரிங்' தியேட்டர் 'பிராட்வே'யில் இருந்தது. இப்போது அந்த இடத்தில் வெளியூர் பேருந்து நிலையம் இயங்கி வருகிறது.

● தமிழ்நாட்டில் பல ஊர்களில் முதலில் 'டூரிங்' தியேட்டர்களை நடத்தியவர் திருச்சியைச் சேர்ந்த 'சாமிக்கண்ணு வின்சென்ட்'.

● கோயம்புத்தூரில் நிறுவப்பட்ட முதல் பெர்மனென்ட் தியேட்டர், 'வெரைட்டி ஹால்', இன்றளவும் இயங்கி வருகிறது.

● இந்தியாவில் தயாரிக்கப்பட்ட முதல் மௌனப் படம் : 'ராஜா ஹரிச்சந்திரா' 1913ல் அதைத் தயாரித்து இயக்கியவர் : தாதாசாகேப் பால்கே.

● மௌனப்பட காலத்தில் படத்திலிருந்து மட்டும்தான் ஒலி வராதே தவிர,



• எம்.ஜி.ஆர் - வி.என். ஜானகி

வெண்திரையின் முன்னால் ஒரு ஸ்டூல் மீது நின்று கொண்டு ஒருவர் படம் ஓடிக் கொண்டிருக்கும்போதே உரத்த குரலில் 'கதை' சொல்லிக் கொண்டே வருவார். அவருக்கு,

# அய்யோவ், 72 பாட்டு!



• நம்பியார்



• 'அம்பிகாபதி'யில் எம்.கே.டி - சந்தான லட்சுமி ரங்காச்சாரி

'HOWLER' என்று பெயர். சமயங்களில் நிறைய சொந்த 'சரக்கை'யும் சேர்த்துக் கொள்வார். திரைக்கு முன்னால் இசைக் குழுவினர் அமர்ந்து கொண்டு படம் ஓடும் போது 'லைவ்' ஆகப் பின்னணி இசை வழங்குவார்கள்.

● 'மேனகா' படத்தில்தான் முதல் முத்தக் காட்சி இடம்பெற்றது. டி.கே. ஷண்முகம், கே.டி. ருக்மிணியை முத்தமிட்டார்.

● 'நவராத்திரி' படத்தில் நடிகர் திலகம் ஒன்பது வேடங்களில் நடித்திருப்பது எல்லோருக்கும் தெரியும்! ஆனால் 1935ல் வெளிவந்த 'டம்பாச்சாரி' படத்தில் சி.எஸ். சாமண்ணா என்ற நடிகர் பதினொரு வேடங்களில் நடித்து சாதனை புரிந்திருக்கிறார். அச்சாதனை இன்று வரை முறியடிக்கப்படவில்லை.

● கே. சாரங்கபாணி, எம்.என். நம்பியார் இருவரும் 'பக்தராமதாஸ்' படத்தில் அறிமுகம் ஆனார்கள். கடந்த அறுபத்தாறு ஆண்டுகளாக நடித்து வரும் எம்.என். நம்பியார்தான் இன்று நம்மிடையே இருக்கும் மிக மூத்த நடிகர்.

● 1936ல் வெளிவந்த 'இந்திர சபா' என்ற படத்தில் எழுபத்திரண்டு பாடல்கள் இடம்பெற்றிருந்தன.

● 1954ல் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் நடித்து பெரும் வெற்றி பெற்ற 'மனோகரா' 1936 லேயே முதன் முதலில் படமாக்கப்பட்டது. நாடகத்தை எழுதிய பம்மல் சம்பந்த முதலியாரே படத்தில் மனோகரன் வேடத்தில் நடித்திருந்தார்.

● இயக்குனர் கே. சுப்பிரமணியம் அறிமுகப்படுத்திய நட்சத்திரங்களில் எம்.கே. தியாகராஜபாகவதர், எம்.எஸ். சுப்புலட்சுமி எஸ்.டி. சுப்புலட்சுமி, டி.ஆர். ராஜகுமாரி, வி.என். ஜானகி, பி.எஸ். சரோஜா போன்றோர் மிகப் பிரபலமானவர்கள்.

● 'வயது வந்தவர்களுக்கு மட்டும்' என்று அறிவிக்கப்பட்ட முதல் தமிழ்ப் படம் : 'மர்மயோகி' (1951). கே. ராம்நாத் இயக்கியிருந்த அப் படத்தில் செருகளத்தூர் சாமா பல காட்சிகளில் ஆவி வடிவில் வருவார். அதனால் தணிக்கைக் குழுவினர் 'அடல்ட்ஸ்' முத்திரை குத்தினார்கள் போலும்! படத்தின் இளம் கதாநாயகனாக நடித்தவர் எம்.ஜி.ஆர். என்றாலும் 'மர்மயோகி'யாக நடித்தவர் சாமா!

தொகுப்பு: **அறந்தை மணியன்**

**கலை என்கிற அடையாளத்தைத் தொலைத்து முழுக்க முழுக்க வியாபாரமாகி விட்டது சினிமா!**



தயாரிப்பாளராகும்படி ஊக்கம் கொடுத்தது ரஜினி ஸார். என்னைத் தயாரிப்பாளராக்கியது கமல் ஸார். இரண்டு பெரும் புள்ளிகள் எனக்குத் தைரியம் கொடுத்ததால்தான் நான் தயாரிப்பாளரானேன். அதே சமயம் கமல் ஸாரை வச்சு 'தெனாலி' எடுக்கிற அளவுக்கு எனக்கு வசதியும் இல்லை. கடன் வாங்கித்தான் படம் எடுத்தேன். சம்பாதிக்கவும் செஞ்சேன். அதை மறுக்கலை.

**கலைஞன் வியாபாரியாக மாறும்போது கலைஞன் தோற்றுப் போகிறான்**

**அதனால் இங்கே, போட்ட பணத்துக்கு லாபம் ஈட்டித் தரும் இயக்குநர்களுக்குத்தான் மரியாதை. அந்த வகையில் கோடம்பாக்கத்தில் முதல் மரியாதை இயக்குநர் கே.எஸ். ரவிகுமாருக்குத்தான்! 'லாபம் வேண்டும்' என்று விரும்பும் தயாரிப்பாளர்கள் மட்டுமல்ல 'வெற்றி வேண்டும்' என்று ஆசைப்படும் ஹீரோக்களின் சாய்ஸும் கே.எஸ். ரவிகுமார்தான்.**

இன்றைய தேதிக்கு கே.எஸ். ரவிகுமாரை வைத்துப் படம் எடுக்கக் காத்திருக்கும் படாதிபதிகள் கொஞ்ச நஞ்சமல்ல. அவர் 'யெஸ்' என்றால் பணப்பெட்டியோடு படையெடுத்து வருவார்கள்.

இந்த நிலையில் தெனாலியைச் சொந்தமாகத் தயாரித்தார் ரவிக்குமார்.

**சொந்தப்படம் எடுக்க நினைத்தது ஏன்? கூடுதல் சுதந்தரம் வேண்டியா? அல்லது கூடுதல் பணம் சம்பாதிக்கும் ஆசையிலா?**

"இரண்டுமே இல்லை. என்னைத்

**என்று சொல்வார்கள். உங்கள் அனுபவம் என்ன?**

தயாரிப்பாளரான பிறகும் கலைஞன் கலைஞனாகவே இருந்தால் தோற்றுப் போக மாட்டான் என்பது என் எண்ணம். 'தெனாலி' படம் எடுக்கும் போது நஷ்டம் வருமா லாபம் வருமா என்றெல்லாம் கவலைப்படாமல், என் மற்றப் படங்களுக்குச் செய்த செலவை விட அதிகமாகவே செய்தேன். நியூஸிலாந்து போய் ஒரு பாடல் காட்சி எடுத்தாலும் அதே பாட்டுக்கு இங்கே வந்தும் செட்டு போட்டு பாக்கியை எடுத்தேன்.

இதே படத்தை வேறே தயாரிப்பாளர் எடுத்திருந்தால் இதெல்லாம் எதுக்கு வேஸ்ட்டுன்னு சொல்லிருப்பேன். என் படம்ங்கிறதால ஜாஸ்தியா செலவு பண்ணினேன். சொந்தப் படம் என்பதால செலவு பண்ணலைன்னு யாரும் சொல்லிடக்கூடாது பாருங்க. இன்னொரு காரணம், அது என்டர்டெயின்மென்ட் சப்ஜெக்ட். அதுக்கு என்னென்ன தேவையோ அதை எல்லாம் கொடுக்கணும்னு நினைத்தேன்.

இங்கே நான் தயாரிப்பாளரா யோசிக்கலை. கலைஞனாத்தான்



# “பாதை மாற மாட்டேன்!”

— கே.எஸ்.ரவிகுமார்

யோசிச்சேன். நான் நினைச்சிருந்தா சிக்கனம் புடிச்சிருக்க முடியும். அப்படி நான் செய்யலை.

சமயம் வரும் போதுதான் சொந்தப் படம் எடுப்பேன். நான் நினைச்சா வருஷத்துக்கு மூனு படம் கூட சொந்தமா எடுக்கலாம். வேற டைரக்டர்களை வைத்தும் எடுக்கலாம். ஆனா எனக்கு அதில இஷ்டமில்லை. ஒரு டைரக்டரா எனக்கு இப்ப மார்க்கெட் இருக்கு. அதைப் பயன்படுத்திக்கிறதை விட்டுட்டு சொந்தப் படம் எடுக்கிறதுல விருப்பமில்லை.

**நீங்கள் இதுவரை எடுத்த படங்கள் எல்லாம் மத்தவங்க கதைகள்தான். உங்க கதையைப் படமாக்க ஏன் முயற்சி செய்யவில்லை?**

நானே ஒரு கதையை எழுதி படம் பண்ணினா அதில் உள்ள நல்லது கெட்டது எனக்குத் தெரியாது. மத்தவங்க கதையா இருந்தால் அதில உள்ள மைனஸ் பிளஸ் பாயின்ட்கள் பளிச்சனு தெரியும். அப்படி தெரியுறப்ப மைனஸ் பாயின்ட்டுகளைக் களைஞ்சு எடுத்திட்டு நல்லதை மட்டும் வச்சுக்கிட்டு, நான் அதில என்னென்ன எல்லாம் சேர்க்க முடியுமோ அதை எல்லாம் சேர்த்து ஸ்கிரிப்ட் பண்றேன். இதுக்குச் சம்மதிக்கிறவங்ககிட்டதான் நான் கதையை வாங்குறேன்.

என் கதையில கை வைக்கக் கூடாதுன்னு சொன்னாங்கன்னா அந்தக் கதையே வேண்டாம்னு சொல்லிடுவேன். உண்மையைச் சொல்லணும்னா கதாசிரியர்கள் கொடுக்கிற அவுட்லைனை வச்சுக்கிட்டு நான்தான் புதுக்கதையே பண்றேன். அப்படிப் பண்ணினாலும் கதை என்று அவங்க பேரைத்தான் போடுறேன். அதன் மூலம் அவங்களுக்கு நாலு படம் வந்து லைஃப் கிடைச்சா அதுவே சந்தோஷம்.

எல்லாத்தையும் விட இன்னொரு காரணம்... பல பேரு என்கிட்ட கதை சொல்ல வர்றாங்க. அதை எல்லாம் கேட்ட வகையில இப்ப என்வசம் நிறைய கதைகள் இருக்கு. அதை கரெக்ட் பண்ணவே நேரம் சரியா இருக்கு. அதனால் சொந்தக் கதைகள் பற்றி யோசிக்க முடியலை.

**நீங்கள் கமர்ஷியலாக படம் எடுக்க வேண்டும் என்ற பாணியை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். இந்தப்**



## முத்தமிட நேரமில்லை!

***க**டத்தல் உலகம், தீவிரவாதம், மதக்கலவரம் என ஏதாவது நாட்டு நடப்புப் பிரச்னையையே கதைக் கருவாக்கும் மணிரத்னம் அடுத்ததாக விடுதலைப்புலிகள் பற்றி படமெடுக்கிறார். பெயர் 'முத்தமிட நேரமில்லை.' கேரள காட்டுப் பகுதியில் தங்கி, சப்தமில்லாமல் எண்பது சதவிகிதம் படத்தை முடித்து விட்டாராம்.*

**— சஜோ**

**பாதையைத் தேர்ந்தெடுத்ததன் பின்னணி என்ன?**

என்னோட முதல் படமான 'புரியாத புதிர்' கமர்ஷியல் விஷயங்கள் இல்லாத படம். அதுக்கு அடுத்து நான் செய்த 'சேரன் பாண்டியன்' கமர்ஷியல் பாயிண்ட் ஆஃப் வ்யூவுல சொல்லப்பட்ட சென்ட்டிமென்ட்டான கதை. அந்தப் படம் ஹிட்டானதும் சக்ஸஸை மெயின்டெயின் பண்ண ஆரம்பிச்சுட்டேன்.

நான் அஸிஸ்டெண்ட் டைரக்டரா இருந்தப்ப பல தயாரிப்பாளர்கள் நஷ்டமடைஞ்சதைப் பார்த்திருக்கேன். என் தயாரிப்பாளர்கள் யாரும் அப்படி ஆகக் கூடாதுன்னு முடிவு பண்ணினேன். அதனாலதான் இந்த ரூட்டை ஃபாலோ பண்ணி கமர்ஷியலா படம் எடுக்க ஆரம்பிச்சேன். நான் இப்படி கமர்ஷியல் படங்கள் பண்றதால என்னால ஆர்ட் பிலிம் எடுக்க முடியாதுன்னு அர்த்தமில்லை. ஆர்ட் பிலிம் எடுக்க என்னாலும் முடியும்.

**வர்த்தகரீதியில் வெற்றி பெற்றுக் கொண்டிருக்கும் டைரக்டராக இருந்தாலும் வித்தியாசமான பல முயற்சிகளைச் செய்ய முடியவில்லையே என்ற வருத்தம் ஒரு கலைஞனாக உங்களுக்கு இருக்கிறதா?**

இல்லவே இல்லை. கமர்ஷியல் ரூட்டுல நான் ஜெயிச்சிருக்கேன். அதனாலதான் என்னை ஜனங்களுக்குத் தெரியுது. 'புரியாத புதிர்' மாதிரி தொடர்ந்து படம் எடுத்திருந்தா இந்நேரம் நான் காணாமல் போயிருப்பேன். பல பேர் இப்படி காணாமப் போயிருக்காங்க. ஸோ... கமர்ஷியல் டைரக்டரா இருப்பதில் எனக்கு எந்த வருத்தமும் இல்லை. அதே சமயம் என் படங்கள் சில, வித்தியாசமான படங்களாகவும் வந்திருக்கின்றன என்பதையும் நீங்கள் மறக்கக் கூடாது.

அதே சமயம் ஒருசில புத்திசாலிகளால் பாராட்டப்பட வேண்டும் என்பதற்காக என் பாதையை மாற்றிக் கொள்ளும் உத்தேசம் இல்லை. கமர்ஷியலாகப் படமெடுக்கும் டைரக்டராகவே இருக்க விரும்புகிறேன்.

**— ஜெ. பிஸ்மி**

# எங்கும்
# எப்போதும்
# எந்நேரமும் அணுகலாம்
# எல்ஐசி



**ஏனெனில் எல்ஐசி கணினி இணைப்பு வரை முன்னேறியுள்ளது.**
**பாலிசி தகவல்கள் இப்போது நொடிப் பொழுதில் கிட்டும்.**

- இந்தியா முழுவதுமுள்ள அனைத்து 2048 கிளைகளும் கணினி மயமாக்கப்பட்டுள்ளன.
- 41 நகரங்களிலுள்ள எல்லா 663 கிளைகளும் தற்போது கணினி இணைப்பு மூலம் இணைக்கப்பட்டுள்ளமையால் எந்த கிளையிலும் பிரிமியத்தை செலுத்தி உங்கள் பாலிசி நிலையை தெரிந்து கொள்ள முடியும்.
- பாங்க் ஆஃப் பஞ்சாப், கார்ப்பரேசன் பாங்க், ஐசிஐசிஐ பாங்க், ஹெச்டிஎஃப்சி பாங்க், யூடிஐ பாங்க், billjunction.com அல்லது timesofmoney.com ஆகியவைகளுள் ஒன்றில் பதிவு செய்து இணையம் மூலமாக பிரிமியம் செலுத்தலாம்.
- மேலும் www.licindia.com யில் பதிவு செய்தும் இணையம் மூலமாக பாலிசி நிலைமை பற்றி தெரிந்து கொள்ளலாம்.
- பாலிசி குறித்த தகவல்களை பெற நேரடி மற்றும் இணைப்பற்ற தொடு திரை மையங்களைப் பயன்படுத்தவும்.
- பாலிசி பற்றிய தகவல்கள் உங்கள் தொலைபேசி (ஐவிஆர்எஸ்) மூலமாக பெறுங்கள்.
- அதிக தகவல்களுக்கு www.licindia.com இணைய தளங்களை நாடுங்கள்.



**லைஃப் இன்சூரன்ஸ் கார்ப்பரேசன் ஆஃப் இந்தியா**

இந்தியாவை நாங்கள் நன்கு அறிவோம்

LIC 29 (7640) TAM

Insurance is the subject matter of solicitation.



# இரவு...

இரவினை நேசியுங்கள்...
அது நட்சத்திரப் பூக்கள்,
உன்னுடன் நடாத்தும்
நேர் காணல் நேரம்!

இரவினை நேசியுங்கள்...
அன்று... உதிர்ந்த பகலையும்,
அடுத்து உதிக்கும் பகலையும்
கோக்கும்... பூ... நாறுகள்!

இரவினை நேசியுங்கள்...
அந்த... சாம்பல் பொழுதில்
உன் முகம் புதைகிறது,
உன் ஆன்மா விழிக்கிறது!

இரவினை நேசியுங்கள்...
இயற்கை தன்
அச்சுகளை நகலெடுக்கும்
ஜனனப் பட்டறைகள்!

இரவினை நேசியுங்கள்...
உனது அந்தப் பகலின்,
அடித்தல் திருத்தல்களை அழித்து,
புதுப்பித்த கரும்பலகைகள்!

இரவினை நேசியுங்கள்
அவை உயிர் சுவாசமுள்ள இறப்புகள்,
எண்ணச் சுமைகளைத் தாங்கும்,
சுமை தாங்கிக் கற்கள்!

இரவினை நேசியுங்கள்
உன் அடுத்தக் காட்சியின்,
ஒப்பனைக்கு அவிழ்த்து
விடப்பட்ட திரைச்சீலைகள்!



பா.க.சு. மணியன்

● பஞ்சவண்ணமகன், கருப்பம்புலம்

*? ப. சிதம்பரத்தை அரசியல் அனாதை என்கிறாரே எஸ்.எஸ்.சந்திரன்?*

! அனாதைகள் உயர்வதற்கு வாய்ப்பு உண்டு. பிச்சைக்காரர்கள் என்றுமே பிச்சைக்காரர்கள்தான்!

● இராமகிருஷ்ணன், காயக்காடு

*? முதல்வர் பன்னீர்செல்வம் மேயர் ஸ்டாலினுக்குப் பழரசம் தந்து உபசரித்தது பற்றி..?*

! இந்தப் பண்பாட்டில் போலித்தனம் இல்லையெனில், மாநகராட்சி நல்லவிதமாக நடக்க அளிக்கப்படும் ஒத்துழைப்பாகவும் உருமாற வேண்டும்.

● கல்லார் ரஹ்மத், நாகை - 1

*? 'தனியொரு மனிதனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்ற பாரதியின் வார்த்தையில் தீவிரவாதம் இல்லையா?*

! "அன்பு சிவம்; உலகத் துயர் யாவையும்
அன்பினிற் போகு மென்றே - இங்கு
முன்புமொழிந்து உலகாண்டதோர் புத்தன்
மொழி, எங்கள் அன்னை மொழி!"
என்று பாரதமாதா குறித்து எழுதியவனும் பாரதிதான். கவிஞனை முழுமையாகப் பார்ப்பது கடமை.



* 'நேரம்'தான்!

# ரஜினியின் புதுப்படம் அவ்வளவுதானா?

● ஆர். லட்சுமி, மதுரை - 16 ★

*? மீண்டும் சிமெண்ட் விலை குறையும் என எதிர்பார்த்தால், திடீரென கூடிவிட்டதே... என்ன காரணம்?*

! கடந்த ஆட்சியின்போது, இதற்குத் தி.மு.க.தான் காரணம் என்று அ.தி.மு.க.வும் த.மா.கா.வும் குதியோ குதி என்று குதித்தனர். இப்போது ஏன் மௌனம்?

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

*? 'கருணாநிதியின் குற்றச்சாட்டுகளுக்கெல்லாம் பதில் சொல்லி, நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை' என்று ஜெயலலிதா கூறியிருப்பது பற்றி...?*

! ஆதாரங்களோடு குற்றச்சாட்டுகளைச் சொன்னால், அரசியல்வாதிகள் இந்த பதிலைத்தான் சொல்வார்கள்.

* மூலிகைடூர்!



* பண்பும்...



* ... பயனும்!

● ஏ. முத்து, மதுரை

*? எந்த கட்சி ஆட்சிக்கு வந்தாலும் தாதா வீரமணியின் செல்வாக்கு குறையவில்லையே...?*

! ஆட்சியிலும் கட்சியிலும் தாதாக்கள் இருப்பதுதான் காரணம்!

● எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

*? ரஜினியின் புதுப்படம் அவ்வளவுதானா...?*

! உடம்பில் பளபளப்பை ஏற்படுத்திக் கொள்ள, மூலிகைக் குளியலுக்காக கேரளா சென்றிருப்பதாகத் தகவல். இதிலிருந்தே அடுத்த படத்துக்கு அவர் ஆயத்தம் ஆகிவிட்டார் என்று தோன்றவில்லையா!

● ரேவதி சங்கர், சென்னை - 13

*? பாகிஸ்தான் இரட்டை வேடம் போடுகிறதே..?*

! இன்றா, நேற்றா? ஜின்னா காலத்தில் தொடங்கி அதைத்தானே செய்து

கொண்டிருகிறார்கள்!

● மல்லிகை மன்னன், மதுரை - 17

? 'இந்தியாவின் பூச்சாண்டி மிரட்டல்களுக்கு நாங்கள் அஞ்ச மாட்டோம். ஏனெனில் எங்கள் கைகளில் வளையல்களை நாங்கள் அணிந்து கொண்டிருக்கவில்லை.' என்று கிண்டலாக பதில் அளித்துள்ளாரே முஷரஃப்.


* நிதியில்லா அமைச்சர்!

! ஆண் ஆதிக்கத்தின் உச்சகட்டமான பேச்சு. பாக் ராணுவத்தில் எப்படியோ, இந்திய ராணுவத்தில் ஏராளமான பெண்கள் உண்டு. அவர்கள் எல்லைப்புறத்தில் நின்று நாட்டைக் காக்க என்றும் தயாராயிருக்கிறார்கள்.

● ஆர். வேலு, மதுரை- 16

? பொது இடங்களில் புகை பிடித்தால் தண்டனை


* செல்வாக்கு மணி!

* கிண்டல்!




* இடைஞ்சல்!

என மாநில அரசுகளுக்கு சுப்ரீம் கோர்ட் உத்தரவு பிறப்பித்துள்ளது சரிதானா..?


* உயர்வதெப்போ...?

! நூற்றுக்கு நூறு சரி; புகை பிடிப்பதால் பாதிக்கப்படுகிறவர் ஒருவர் என்றால் அவர் வெளிவிடும் புகையால் பாதிக்கப்படும் 'பாஸிவ் ஸ்மோக்கர்ஸ்' நாலு பேர்! நால்வருடைய ஆரோக்கியத்தைக் கெடுக்க ஒருவருக்கு என்ன உரிமை இருக்கிறது?

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? 'இந்துக்கள் தீபாவளியை எப்படி கொண்டாடலாம், எந்த நேரத்தில் கொண்டாடலாம் எனச் சொல்ல வேண்டியது சாஸ்திரம் தெரிந்த சங்கராசார்யார்கள் தானே தவிர, சட்டம் அறிந்த வல்லுனர்கள் அல்ல' என்று இல. கணேசன் பேசியிருப்பது பற்றி...?

! இல. கணேசனின் கொண்டாட்டம் அடுத்தவருக்கு இடைஞ்சலாக அமையும் போது நீதிமன்றம் தலையிட்டுத்தான் ஆக வேண்டும்!

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்

? எடுக்க எடுக்க குறையாதது அக்ஷய பாத்திரம். அதுபோல் போடப் போட நிரம்பாத பாத்திரம் எது..?

! வேறென்ன?... மனம்தான்! அது கேட்கும் பணம்தான்! இன்னும் இன்னும் என்று கேட்டுக் கேட்டுப் படாதபாடு படுத்துகிறதே மனித குலத்தை!

● எம். சிவ குருநாதன், சென்னை - 42

? அண்மையில் பாகிஸ்தானில் ஒரு தேவாலயத்தில் பதினெட்டு கிறிஸ்துவர்கள் தீவிரவாதிகளால் படுகொலை செய்யப்பட்டது பற்றி..?

! இத்தகைய இழிநிலை நம் நாட்டிலேயே இருக்கும்போது அண்டை நாட்டைக் குறை கூறுவானேன். முதலில் நாம் திருந்துவோம்!

* முழுமை முக்கியம்!



● கே. துரைசாமி, மங்களப் பட்டி

? பத்திரிகை தர்மம் என்பது...?

! முதலும் முடிவுமாக : தேச நலன்; தேச நலன்; தேச நலன்!

● செ. சக்திராஜ், திருச்சி - 1

? 'தி.மு.க. ஒரு செல்லாக்காசு' என்று பொன்னையன் சொல்லியிருக்கிறாரே?

! அரசு ஊழியர்களுக்குத் தீபாவளி அட்வான்ஸ் கூடத் தரமுடியாத அளவுக்கு அரசாங்கத்தையே செல்லாக் காசாக்கியவர் சொல்கிறார், கேட்டுக் கொள்ளுங்கள்!

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
**கல்லார் ரஹ்மத்,**
220, கடசல்கார தெரு,
நாகை - 611 001

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
**ஆர். லட்சுமி, 78, மில் காலனி, புது ஜெயில் ரோடு,**
மதுரை - 625 016

# ஒரு நிஜம்

**பொ**ழுது எப்போதும் போல் புலர்ந்தது. ஆனால் சண்முகத்துக்குத் தான் அது வழக்கமான பொழுதாக இல்லை.

காலைக் கடனுக்கு அவர் பெரும்பாலும் ஆற்றுப் பக்கம் தான் போவார். இவர் போய்வருவதற்குள்ளாக காமாட்சி, வாசல் தெளித்து, கோலம் போட்டு விடுவாள். நடந்தார். எதிர்த்தாற் போல் கோனார் வீட்டுப் பையன், பால் கேனுடன் வந்து கொண்டிருந்தான். "வாங்க ஆசாரி அய்யா" என்றவாறு நடந்தான். மெயின் ரோட்டுக்கு வந்தார். ஒரு காபி குடித்தால் தேவலை என்று தோன்றியது. பஸ் ஸ்டாப்பை ஒட்டியுள்ள டீக்கடையில் காபி குடித்தார்.

அப்படியே ஆற்றுப் பக்கம் போய் விட்டு, வீட்டுக்கு வந்த போது- வீட்டு எதிரே போலீஸ்காரர்கள் மூன்று பேர் இருந்தனர். பக்கத்தில் கையில் விலங்கு மாட்டப்பட்டு ஒருவன்.

தெருவில் இருந்த அத்தனை ஜனமும் சுற்றி நின்று வேடிக்கை பார்த்தது.

"யாருய்யா அது சண்முகம் ஆசாரி?"

– ஒரு போலீஸ்காரர் கேட்டார்.

"நாந்தாங்க" என்று சண்முகம் முன்னே ஓடினார்.

அவருக்கு போலீசை கண்டதுமே அச்சமானது. ஒரு நகை வேலை பார்ப்பவனையோ, ஒரு நகை கடைக்காரனையோ போலீஸ் அண்டி விட்டது என்றால்- அவன் ஆண்டியாக வேண்டியதுதான். கையில் விலங்கு மாட்டி இருந்தவனையும், பக்கத்தில் போலீஸ்காரனையும் பார்த்தவுடனேயே சண்முகத்துக்கு விளங்கிவிட்டது, யாரும் எதுவும் சொல்லாமலே விளங்கிவிட்டது.

விலங்கால் பூட்டப்பட்டு இருந்த களவாணிப்பயல் எங்கேயாவது நகையைத் திருடி, எங்கேயோ விற்று ஏப்பம் விட்டு இருக்க வேண்டும்.

போலீஸில் பிடிபட்டுவிட்டால் யாராவது ஒரு அப்புராணி ஆசாரியையோ, அப்புராணி நகைக்கடைக் காரரையோ கைகாட்டி விட்டு விடுவான். போலீஸ் அந்த நபரை, மிரட்டி, உருட்டி நகையை வசூலித்து விடும். இம்மாதிரியான பல சம்பவங்களை சண்முகம் நிறையவே பார்த்து இருக்கிறார். இப்போது தன்வரை வந்துவிட்டது.

"இந்தத் திருட்டு பயகிட்ட நகை வாங்கினியாமே... எத்தனை பவுன் வித்தான்?"

"சார்... இவன் யாருன்னே தெரியாது. தெரியாத நபர்கிட்ட எந்தப் பொருளும் வாங்குறது இல்ல. தெரிஞ்ச ஆளா இருந்தாலும் நான் செய்து கொடுத்த பழைய நகையை மட்டும் தான் வாங்குவேன். வேற கடையில் செய்த நகையை நான் வாங்குறதே இல்ல.

"இங்கதான் வித்தேன்னு அடிச்சு சொல்றானே" என்று வழுக்கை தலை போலீஸ் கேட்டார். இந்த மாதிரி திருட்டுப் பயல்களிடம் நகை வாங்கவே சிலர் இருக்கின்றனர். அவர்களிடம் விற்றுவிட்டு, சம்பந்தமே இல்லாதவர்களை மாட்டி விடுவது- இல்லை திருடிய நகைகளைப் பதுக்கிவைத்துவிட்டு- பிற்பாடு கேஸெல்லாம் முடிந்த பின்னால் மெள்ள விற்பது...

சண்முகத்துக்குப் பீதி ஏற்பட்டது. இந்தப் படுபாவிகள் என்னவெல்லாம் பாடுபடுத்த போகிறார்களோ என்று. பட்டறை வைத்து இருபது வருஷமாயிற்று. இப்போது தனி ஆளாய்த் தலையெடுத்து நிற்கையில் -இப்படி

ஒரு கண்டமா? சண்முகம் வீட்டுத் திண்ணையின் வலது பக்கம் பட்டறை வைத்திருக்கிறார். இடது பக்கத் திண்ணை காலியாக உள்ளது. சாயங்காலத்துக்கு மேல் பட்டறையை எடுத்து வைத்து விட்டால் – அரட்டையடிக்க... இரவு தூங்க.. பாட்டன் காலத்துப் பழைய வீடு. அந்தத் தெருவில் நான்கு தலைமுறையாய் வசிக்கும் ஒரே குடும்பம் சண்முகத்தின் குடும்பம்தான்.

"என்னய்யா சொன்னதையே சொல்லிட்டு இருக்கே. எந்த குற்றவாளியா தன் தப்பை ஒத்துகிட்டு இருக்கான்" என்று கேட்டார் ஒரு போலீஸ்காரர்.

"சார்... நா பெரிய ஆசாரி கிடையாது... அன்றாடங்காய்ச்சி... உடைந்த தோடைப் பத்த வைக்கிறது, அறுந்து போன செயினைப் பத்த வைக்கிறதுன்னு அஞ்சுக்கும், பத்துக்கும் வேலை பார்க்கிறவன். காது குத்தப் போயி அலைஞ்சு, திரிஞ்சு வயித்தைக் கழுவுறவன். பெரிய பெரிய ஆர்டர் எல்லாம் டவுனுக்குப் போயிடும். ஏதோ மாசத்துல பத்து நாள் வேலை பார்த்து பத்து நாள் சும்மா இருக்கிறவன். நீங்க என்னடான்னா பதினைஞ்சு பவுன் நகையை வாங்கினதா கதை கட்டுறீங்க. அவ்வளவு வசதி இருந்தா நா இந்த வீட்டுல குடி இருந்துட்டு, திண்ணையில் பட்டறையை வைச்சிட்டு இருப்பேனா?' என்ற சண்முகத்தின் கன்னத்தைச் சேர்த்து ஓர் அறை கொடுத்தார் வழுக்கை தலை போலீஸ்காரர்.

"என்னய்யா ரொம்ப பேசுறே... திருட்டு நகைய வாங்குனது குத்தம். அதை வாங்கலைன்னு பொய் பேசுறது அதைவிட பெரிய குத்தம். ஸ்டேஷனுக்கு வாய்யா–" என்ற போது காமாட்சி–

"சார், நாங்க யார்கிட்டயும் எதுவும் வாங்கல.... அவரை விட்டுடுங்க" என்று புலம்பினாள்.

"புள்ளைங்களப் பார்த்துக்க. நா வந்துடுவேன். பயப்படாதே. மடில கனம் இருந்தா தானே வழில பயம்" என்றார். அவர் அப்படிச் சொன்னாலும் மனத்தில்– அவருக்கும் பயம் இருந்தது.

தெருவில் இருந்த அத்தனை ஜனமும் வாசலில் நின்று வேடிக்கை பார்த்தது. திருடனுக்குப் பூட்டிய விலங்கைக் கழற்றி இவர் கைக்கும், திருடனுக்குமாய்ச் சேர்த்து மாட்டி வைத்தார்கள்.

**ப**ஸ் ஸ்டாப்புக்கு அழைத்து வந்தார்கள். பஸ்ஸில்தான் செல்ல வேண்டும் டவுன் போலீஸ் ஸ்டேஷனுக்கு. சண்முகம்பத்தர் என்றால்ஊரில் உள்ள சகலருக்கும் தெரியும். குழந்தைக்கு மொட்டை போட்டதும் காது குத்த வேண்டும் என்று சகலரும் அழைப்பது சண்முகத்தைதான். ஊரில் மொட்டை போட நாலு நாவிதர்கள் இருக்கிறார்கள். ஆனால் காது குத்த இவரை விட்டால் ஆள் இல்லை.

"என்னங்க சாமி"– என்று பலரும் பஸ் ஸ்டாப்பில் நெருங்கினர்.

"யேய் அங்கிட்டுப்போ... குற்றவாளி கிட்ட என்ன பேச்சு வேண்டி கிடக்கு" என்று போலீசார் விரட்டினர்.

"நா பஞ்சாயத்து தலைவர்கிட்ட சொல்லி என்ன ஏதுன்னு கூட்டிட்டு வர்றேன். டவுன் ஸ்டேஷனுக்குத் தானே... வர்றோம்" டீக்கடை அழகர் சாமி கடையை விட்டு – மெனக்கெட்டு வெளியே வந்து சொல்லிவிட்டுப் போனார்.

பஸ் இன்னும் வரவில்லை. இவர்களை நிற்கவைத்து விட்டு மூன்று போலீஸ்காரர்களும் டீ குடித்தனர். ஒரு போலீஸ்காரர் பக்கத்தில் வந்து, "யோவ் பேசாம குற்றத்தை ஒத்துக்க... பதினைஞ்சு பவுன்கிறதை பத்து பவுன்னு குறைச்சுக்கலாம். வேற ஆள் எவனாவது மாட்டினா பாக்கிய அவன் கிட்ட வசூல் பண்ணிடலாம்" என்றார்.

"நான் வாங்கலய்யா.... நான் வாங்காம எப்படி குத்தம் செஞ்சேன்னு ஒத்துக்க முடியும்."

"அடிபட்டே சாகனும்னு உன் தலையெழுத்து... யாரால் மாத்த முடியும்.."

செய்யாத குற்றத்தை ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்கு முன் இதே கிராமத்தில் இந்த மாதிரியான சம்பவங்கள்

## தீபாவளி பழசு; மொழிகள் புதுசு!

- மாப்பிள்ளை வரும் வரை தீபாவளி காத்திருக்குமா?
- மருமகனுக்குத் தெரியுமா தீபாவளிக் கடன்?
- நல்ல வெடிக்கு ஒரு தீக்குச்சி போதும்.
- ஆனை வெடி சத்தத்தில் அம்மியும் அசையும்.
- தீபாவளி வரும் பின்னே, வெடி ஓசை வரும் முன்னே.
- தீப்பெட்டியை ஒளித்து வைத்தால் தீபாவளி நின்று விடுமா?



♦ தீபாவளி பட்சணம் திருக்கார்த்திகைக்கு ஆகுமா?

♦ ஆயிரம் பட்சணத்திற்கு, ஒரு துண்டு இஞ்சி போதும்.

— சா. அனந்தகுமார்

நடந்துள்ளன. மேட்டுத் தெருவில் அடகுக் கடை வைத்திருந்த செட்டியாரை இப்படித் தான் திருட்டு நகை வாங்கினார் என்று ஸ்டேஷனில் வைத்து அடித்ததில் செட்டியார் செத்துப் போனார். ஊர் மக்கள் எல்லாம் சாலை மறியலில் ஈடுபட்டனர். அது நடந்து பத்து வருஷம் இருக்கும். ஒரு கௌரவமான ஸ்தாபனத்தை நடத்துபவன்– திருடர்களோடு சகவாசம் வைத்துக் கொள் வானா? போலீஸுக்கு இது தெரிய வேண் டாம்? அவர்களுக்குத் தேவை கேஸை முடித் தாக வேண்டும். செட்டியார் ஜெயிலிலேயே செத்தார் என்றால் – மாணிக்கம் ஆசாரி சொத்து பத்தை எல்லாம் விற்று போலீஸுக் குத் தெண்டம் கட்டிவிட்டு அவமானம் தாங்காமல் குடும்பத்தோடு தற்கொலை செய்து கொண்டார்.

தனக்கென்று என்ன விதிக்கப்பட்டு இருக்கிறது என்று தெரியவில்லை. உள்ளே ஒன்றும் இல்லாத பித்தளை வாழ்க்கை.

**லா**க்கப்பில் திருடனுடன்தான் சண்முகத்தையும் அடைத்து வைத்திருந் தனர். திருடன் ஆள் ஷோக்காய் இருந்தான். அடியே வாங்கி இருக்கமாட்டான் போலும்.

'எவனாவது ஒருத்தனைக் கையக்காட்டு.. போதும், நீ எதுக்கு அடிவாங்கறே' என்று கூறி இருப்பார்கள்.

இந்நேரம் காமாட்சியும், புள்ளையும் என்ன செய்கிறதோ. புள்ளைகள் – சின்ன குழந்தைகள்... 'நயினா..நயினா'னு தவிக்கும். கல்யாணம் பண்ணியதே தாமதமாகத்தான். பிற்பாடு குழந்தைகளும் அவசரமில்லாமல் தான் பிறந்தன. சின்ன குழந்தைகளை வைத்து கொண்டு என்ன பண்ணுகிறாளோ காமாட்சி.

"எங்கேடா வந்தே..நாந்தான்.. உன் விளை யாட்டுக்குக் கிடைச்ச ஆளா?" திருட்டுப் பயல் பக்கம் திரும்பிக் கேட்டார்.

"வேஷ்டி சட்டையைக் கழட்டுய்யா... உள்ளே டவுசர் போட்டு இருக்கேல.. இடுப்புல கயிறு கட்டி இருந்தா அதையும் கழட்டு. வெறும் டவுசர் மட்டும்தான் போட் டுக்கலாம்'' என்று வேஷ்டி சட்டையை உருவிக் கொண்டனர். திருடனை லாக் கப்புக்குள் தள்ளும் போதே– வேஷ்டி சட்டையை வாங்கிக் கொண்டனர். ஐம்பது வயதில் வாழ்க்கையில் இப்படி ஒரு கண்றாவி நிகழ்ச்சி.

''யோவ், இன்னிக்கு சனிக்கிழமை. திங்கட் கிழமை தான் கோர்ட். ரெண்டு நாள் இங்கதான் இருப்பே.... குத்தத்தை ஒப்புக் கிட்டா இப்பவே வீட்டுக்கு அனுப்பறோம். டைம் எடுத்துக்கோ... மெள்ள மெள்ள திருட்டு நகையைக் கொடுத்துடு... இல்ல ரெண்டு நாள்ல அடிபட்டே சாகப்போறே..."

"பத்து வருஷம் உள்ளே வைச்சாலும் பரவாயில்லை.. நா தப்புபண்ணலை" என்ற போது பஞ்சாயத்து தலைவர் நாலைந்து தெரு ஜனத்துடன் வந்தார். எஸ்.ஐயும் அப்போது தான் வந்திருந்தார்.

"வாங்க சார்!" என்றார்.

"சார்... இவரு நம்பிக்கையான நபர்... நீங்க நினைக்கிற மாதிரியான ஆள் இல்லை... எங்க ஊர்க்காரங்களைத் தவிர வேறு தெரியாத நபர்கிட்ட எந்தப் பொருளும் வாங்கமாட்டார். நா உத்தரவாதமா சொல்றேன். விடுங்க" என்றார் பஞ்சாயத்து தலைவர்.

"அதெல்லாம் விடமுடியாது... நகையைக் கொடுத்தாதான் விட முடியும்... ஒரு குற்ற வாளிக்குப் பரிந்து பேச வரலாமா சார்?" என்றார் எஸ்.ஐ.

"வக்கிலோட வர்றோம்" என்று வெளி யேறினார் பஞ்சாயத்து தலைவர்.

பஞ்சாயத்து தலைவரால் தனக்கு விடிவு கிடைக்கும் என்று நம்பினார். இப்போது அந்த நம்பிக்கையும் போய்விட்டது.

அப்படியே தரையில் படுத்தார். இடை யில் விழிப்பு வந்தபோது– இரண்டு போலீஸுகள் வயிற்றையும், காலையும் பதம் பார்த்துக் கொண்டிருந்தனர்.○

# சிவகாமியின் சபதம்

## பூர்வகதை

சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் காஞ்சிமா நகரில் தர்ம மகாராஜாதிராஜ மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி செங்கோல் செலுத்தி வந்தார். அவருடைய சாம்ராஜ்யம் தெற்கே பாண்டிய நாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரி நதிக்கரை வரையில் பரவியிருந்தது.

அக்காலத்தில் பாரத நாட்டிற்குள்ளே ஒப்பற்ற பெருமையுடன் விளங்கிய காஞ்சிமா நகரில் சம்ஸ்கிருத கடிகைகளும், சைவத் தமிழ் மடங்களும், பௌத்த வித்யாஸ்தானங்களும், ஜைனப் பள்ளிகளும் பெயர் பெற்றிருந்தன.

கீழைச் சோழ நாட்டிலுள்ள திருச்செங்காட்டாங்குடி என்னும் கிராமத்திலிருந்து பரஞ்சோதி என்னும் இளைஞன் காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்பதற்காக வந்தான். வழியிலே சந்தித்த நாகநந்தி என்னும் புத்த சந்யாசியுடன் அவன் ஒருநாள் இருட்டிய பின்னர் காஞ்சிக்கோட்டைக்குள் பிரவேசித்தான். அதே தினத்தில், சளுக்க மன்னனாகிய புலிகேசி பல்லவ சாம்ராஜ்யத்தின் மேல் படையெடுத்திருக்கும் செய்தி வந்ததின் காரணமாக, ஆயனச் சிற்பியின் பெண் சிவகாமியின் நடன அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டது என்று ஜனங்கள் பேசிக் கொள்வது பரஞ்சோதியின் காதில் விழுகிறது.

ஆயனரும் சிவகாமியும் சிவிகையில் ஏறி வருகிறார்கள். அச்சமயம் மதம் பிடித்த யானை ஒன்று தெறிகெட்டு ஓடி வருகிறது. பரஞ்சோதி தான் கொண்டு வந்திருந்த வேலை மத யானையின் மீது எறிந்து அது தன்னை நோக்கித் திரும்பியதும் விரைந்தோடுகிறான். வெகு நேரம் இரவில் காஞ்சி நகர் வீதிகளில் அலைந்த பிறகு ஊர்க்காவலர்கள் அவனைச்

**அமரர் கல்கி**

சிறையில் அடைக்கிறார்கள். அன்றிரவே நாகநந்தி அவனைச் சிறையிலிருந்து தப்புவித்து இராஜவிஹாரம் என்னும் புத்தர் கோவிலில் உள்ள இரகசிய வழியின் மூலம் அவனைக் கோட்டைக்கு வெளியே அழைத்துச் செல்கிறார்.

திருநாவுக்கரசருக்கும் ஆயனருக்கும் பரஞ்சோதி ஓலை கொண்டு வந்திருந்தான். திருநாவுக்கரசர் காஞ்சியில் இல்லை என்று அறிந்து, அவன் புத்த பிக்ஷுவுடன் ஆயனர் வீடு செல்கிறான்.

ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாத அஜந்தா வர்ணச் சேர்க்கை இரகசியத்தை அறிந்து வருவதற்காகப் பரஞ்சோதியைக் கிருஷ்ணை நதிக்கரையிலுள்ள ஸ்ரீ பர்வதம் என்னும் நாகார்ஜுன மலைக்கு அனுப்பலாமென்று நாகநந்தி சொல்கிறார். அச்சமயத்தில் மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய புதல்வர் மாமல்ல நரசிம்மரும் ஆயனர் வீட்டுக்கு வரவே, பிக்ஷுவும் பரஞ்சோதியும் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்துகொள்கிறார்கள்.

அதற்குச் சற்று முன்னால் ஆயனர் வீட்டுக்கு அருகிலுள்ள தாமரைக் குளக்கரையில் சிவகாமியும் குமார சக்கரவர்த்தி மாமல்லரும் சந்திக்கிறார்கள். சிவகாமியின் ஊடல் தீர்ந்த பின், அவள் நரசிம்மரிடம் வேலின் மேல் ஆணையாகத் தன்னை மறப்பதில்லை என்று வாக்குறுதி கேட்கிறாள். அப்போது பரஞ்சோதி ஆயனர் வீட்டிலிருப்பது மாமல்லருக்குத் தெரிகிறது. அந்த வீரனைக் கண்டு அவனுடைய வேலைத் திருப்பிக் கொடுக்க நரசிம்மர் விரைந்து செல்கிறார். ஆயனர் வீட்டில் அவனைக் காணாமல் ஏமாற்றமடைகிறார்.

ஆனால், புத்தர் சிலைக்குப் பின்னால் அவனும் பிக்ஷுவும் ஒளிந்திருப்பதைச் சக்கரவர்த்தி கண்டுகொண்டு வெளியில் வந்தபின் சத்ருக்னன் என்னும் ஒற்றனை வேவு பார்க்க ஏவுகிறார்.

சத்ருக்னனை ஏன் ஆயனர் வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று நரசிம்ம வர்மர் கேட்கிறார்.

"அங்கு பகைவர்களின் ஒற்றர்கள் இருக்கக்கூடும் என்பதற்கான அறிகுறிகளை நீ கவனிக்கவில்லையா? ஆயனர் வீட்டில் இருந்தபோது உன் கண்கள் என்ன செய்து கொண்டிருந்தன?" என்று சக்கரவர்த்தி கடிந்துகொள்கிறார்.

ஆயனர் வீட்டிலிருந்தபோது தன் கண்கள் சிவகாமியின் கண்களுடன் காதல் மொழிப் பேசிக்கொண்டிருந்ததை எண்ணி முகம் சிவக்கிறார் நரசிம்ம வர்மர்.

புலிகேசியின் வாதாபி சைனியம் முன்னேறிக் கொண்டிருப்பதாக செய்தி வருகிறது. தாம் போர் முடிந்து திரும்பும்வரை, எக்காரணம் கொண்டும் காஞ்சிக் கோட்டையை விட்டு வெளியே வரக்கூடாது என, சக்கரவர்த்தி, நரசிம்மரிடம் வாக்குறுதி பெறுகிறார். அஜந்தா வர்ணச் சித்திரங்களின் இரகசியம் அறிந்துவர, மன்னரின் ஒப்புதலோடு பரஞ்சோதியை அனுப்பி வைக்கிறார் ஆயனர்.

இராஜபாட்டையில் பயணம் செய்து கொண்டிருக்கும்போது, அமானுஷ்யமான அந்த மலைப்பகுதியில், ஒரு குதிரை வீரன் பரஞ்சோதியைப் பின் தொடர்கிறான். மயூரசன்மன் வீரப் போர் பற்றி பேசி, வழித்துணையாகிறான்.

## முப்பத்து ஒன்றாம் அத்தியாயம்

# வைஜயந்தி

வழித்துணையாகக் கிடைத்த இந்த வீரன் எந்த மயூரசன்மனைப் பற்றிக் கூறி வந்தானோ அதே மயூரசன்மனைக் குறித்து ஏற்கெனவே புத்த பிக்ஷு கூறியிருந்தது பரஞ்சோதியின் ஞாபகத்தில் இருந்தது. ஆனால், அவர் கூறிய வரலாறு இவ்வளவு ரஸமாக இல்லை. அந்த வரலாற்றை அவர் கூறியதன் நோக்கமும் பரஞ்சோதிக்குப் பிடிக்கவில்லை. "அந்த

மயூரசன்மனைப் போல் ஒருவேளை நீயும் ஆனாலும் ஆகலாம்!" என்று புத்த பிக்ஷு கூறியது பரஞ்சோதியின் உள்ளத்தில் அருவருப்பைத்தான் உண்டு பண்ணிற்று. ஏன்? மயூரசன்மன் பேரிலேயே அவனுக்கு அருவருப்பு உண்டாக அது காரணமாக இருந்தது.

ஆனால், இப்போது மயூரசன்மன் செய்த வீரப் போரையும் உடம்பில் முப்பத்தாறு காயங்களுடன் அவன் பல்லவ மன்னனின் முன்பு கொண்டு வந்து நிறுத்தப்பட்டதையும் அறிந்ததும், அவன்மீது பரஞ்சோதியின் மரியாதை பன்மடங்கு வளர்ந்தது.

"அப்பேர்ப்பட்ட வீரன் பல்லவ மன்னனுக்குச் சரணாகதி அடைய மறுத்துத்தான் இருப்பான். அரசனுக்கு எதிராகக் கலகம் செய்பவர்களைப் பூமியில் புதைத்து யானையின் காலால் இடறச் செய்வதுதானே வழக்கம்! பல்லவ ராஜாவும் அப்படிச் செய்து விட்டாராக்கும்!" என்று பரஞ்சோதி மனக் கசப்புடன் கூறினான்.

"இல்லை, தம்பி, இல்லை! சாதாரணமாய், அங்க, வங்க, கலிங்க, காஷ்மீர, காம்போஜ தேசங்களின் ராஜாக்களாயிருந்தால், அப்படித்தான் செய்திருப்பார்கள். ஆனால் காஞ்சி பல்லவ மன்னர்களின் காரியங்கள் ஒரு தனிப் போக்காக இருக்கும்..."

"பல்லவ மன்னர் என்ன செய்தார்?"

"மயூரசன்மனை மன்னித்ததோடு, அவனுடைய வீரத்தை மெச்சி அவன் ஸ்தாபித்த ராஜ்யத்தை அவனுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார். அவரே நேரில் சென்று மயூரசன்மனுக்கு முடி சூட்டி விட்டு வந்தார்!"

"அப்படியா?" என்று பரஞ்சோதி தன் உண்மையான வியப்பைத் தெரிவித்து விட்டு, "அதைக் குறித்து மயூரசன்மன் நன்றி பாராட்டினானா?" என்று கேட்டான்.

"மயூரசன்மன் மட்டுமில்லை. அவன் ஸ்தாபித்த கதம்ப வம்சத்தில் பிறந்தவர்கள் எல்லாரும் சென்ற இருநூறு வருஷத்துக்கு மேலாகப் பல்லவர்களுக்குக் கப்பம் செலுத்திக்கொண்டு நன்றியுடன் இருந்து வந்தார்கள். கிருஷ்ணை–துங்கபத்திரை நதிக்கரை ஓரமாய் அவர்களுடைய இராஜ்யமும் பெருகி வந்தது. கொஞ்ச காலத்துக்குப் பிறகு வைஜயந்தி பட்டணத்தில் தங்கள் தலைநகரை ஸ்தாபித்துக் கொண்டார்கள். அவர்களுக்கு ஆபத்து நேர்ந்த சமயங்களில் பல்லவ மன்னர்களும் வேண்டிய உதவி புரிந்து வந்தார்கள். இருபது வருஷத்துக்கு முந்தி புலிகேசியின் சிற்றப்பன் மங்களேசன் கதம்ப ராஜ்யத்தின் மீது படையெடுத்த செய்தி தெரியுமோ இல்லையோ?"

"தெரியாதே? அது என்ன விஷயம்?" என்று பரஞ்சோதி ஆவலுடன் கேட்டான்.

"ஆமாம்; நீ சிறுபிள்ளை. உனக்கு எப்படி அது தெரிந்திருக்கும்? இப்போது ராட்சஸ ஸ்வரூபம் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தின் மீது படையெடுத்து வருகிறானே, இந்தப் புலிகேசியும் இவனுடைய தம்பிமார்களும் சிறு பிள்ளைகளாக இருந்தபோது, இவர்களுடைய சிற்றப்பன் மங்களேசன் என்பவன் வாதாபி ராஜ்யத்தை ஆண்டு வந்தான். அவனுக்குத் திடீரென்று அயல்நாடுகளைக் கைப்பற்றிப் பெரிய சக்கரவர்த்தி ஆக வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. துங்கபத்திரையைக் கடந்து கதம்ப ராஜ்யத்துக்குள் பிரவேசித்தான். வைஜயந்தி நகரம் வரையில் வந்து அந்த நகரத்தை முற்றுகை போட்டு விட்டான். அப்போது வடக்கு மண்டலத்துப் பல்லவ சைனியந்தான் கதம்ப ராஜாவின் பட்டணத்துக்கு அண்மையில் பெரிய யுத்தம் நடந்தது..."

"யுத்தத்தின் முடிவு என்ன ஆயிற்று?"

"கேட்பானேன்! வீர பல்லவ சைனியந்தான் ஜயித்தது. சளுக்கர்கள் தோற்றுப் பின்வாங்கி ஓடினார்கள். ஆஹா! அப்போது மட்டும் அந்தச் சளுக்கர் படையைப் பல்லவ சைனியம் பின் தொடர்ந்து போய் அடியோடு நிர்மூலம் செய்திருந்தால், இப்போது இந்த யுத்தமே வந்திருக்காது!" என்றான் அவ்வீரன்.

அந்தப் பழைய வரலாறுகளையெல்

லாம் அறிந்து கொள்ளுவது பரஞ்சோதிக்கு ரொம்பவும் சுவாரஸ்யமாயிருந்தது. யுத்தங்களைப் பற்றியும் அவை நடந்த முறைகளைப் பற்றியும் வெற்றி தோல்விகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள அவனுக்கு மிகவும் ஆவலாயிருந்தது. நிலா இல்லாத முன்னிரவில் வழிப் பிரயாணத்தின் அலுப்புத் தெரியாமலிருப்பதற்கும் அது ஏதுவாயிற்று.

"தோல்வியடைந்து ஓடிய சளுக்க சைனியத்தைப் பல்லவ சைனியம் ஏன் தொடர்ந்து போகவில்லை?" என்று அவன் கேட்டான்.

"அதற்குப் பல காரணங்கள் உண்டு. முக்கியமான காரணம் என்னவென்றால், வைஜயந்தி பட்டணத்துக்கு அருகில் நடந்த யுத்தத்தில் பல்லவ சைனியம் ஒரு பெரிய நஷ்டத்தை அடைந்தது. பல்லவ சேனாதிபதி அந்தப் போரில் உயிர் துறந்தார்!"

பரஞ்சோதியின் நினைவு சட்டென்று வேறு பக்கம் திரும்பியது.

"ஐயா! அந்த வீர பல்லவ சேனாதிபதி கலிப்பகைதான். இப்போதுள்ள கலிப்பகையாரின் மாமன்..."

"கேள்விப்பட்டிருக்கின்றேன், அந்த வீர புருஷரை மணம் செய்து கொள்வதாக இருந்த திலகவதியாரைப் பற்றியும் கேட்டிருக்கிறேன்" என்று பரஞ்சோதி பக்தி பரவசத்துடன் கூறினான்.

"உனக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே! நீ பெரிய சைவன் போலிருக்கிறதே!" என்றான் அவ்வீரன்.

"ஆம், ஐயா! என் உற்றார், உறவினர் எல்லாரும் சைவர்கள். திருநாவுக்கரசு அடிகளைத் தரிசிப்பதற்கென்றே நான் கிளம்பிக் காஞ்சிக்கு வந்தேன்..." என்று கூறிப் பரஞ்சோதி சட்டென்று நிறுத்தினான்.

"அப்படியா, தம்பி! நானும் சைவன் தான். திருநாவுக்கரசரை நீ காஞ்சியில் தரிசிக்கவில்லையா?"

"இல்லை!"

"ஏன்?"

"அதற்குள் இந்த வேலை வந்துவிட்டது."

"எந்த வேலை?"

பரஞ்சோதி சற்று நிதானித்து, "ஐயா! என்னுடைய வேலை என்ன என்பது பற்றி நீங்கள் ஒன்றும் கேட்காவிட்டால், நான் பொய் சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படாது!" என்றான்.

"ஆஹா! நீ வெகு புத்திசாலிப் பிள்ளை!" என்றான் அவ் வீரன். பிறகு சொன்னான்: "தம்பி! உன் மாதிரியே எனக்கு ஒரு புதல்வன் இருக்கிறான். உன் வயதேதான் அவனுக்கும். இந்தப் பிரயாணத்தில் என்னோடு தானும் வர வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தான். நான் கூடாது என்று தடுத்துவிட்டேன். அதனால் அவனுக்கு என் பேரில் கோபம்..."

இப்படிப்பட்ட ஒரு வீரத் தந்தையைப் பெற்ற அதிர்ஷ்டசாலியைக் குறித்துப் பரஞ்சோதியின் மனத்தில் சிறிது பொறாமை உண்டாயிற்று.

அந்தத் தகாத எண்ணத்தைப் பரஞ்சோதி மறக்க முயன்றவனாய், "ஐயா! வைஜயந்தி யுத்தத்தைப் பற்றிக் கூறி இடையில் நிறுத்தி விட்டீர்களே! அந்தப் போரில் சேனாதிபதி கலிப்பகை உயிர் துறந்ததாகச் சொன்னீர்கள். ஆனால், பல்லவ சைனியத்துக்கு வேறு சேனாதிபதி கிடைக்கவில்லையா? தோற்று ஓடிய சளுக்கர்களைத் தொடர்ந்து பல்லவ சைனியம் ஏன் போகவில்லை?" என்று கேட்டான்.

"விசித்திர சித்தர் என்று பட்டப் பெயர் பெற்ற காஞ்சி சக்கரவர்த்தியை நீ பார்த்திருக்கிறாயா, தம்பி?" என்று பொருத்தமில்லாமல் கேட்டான் அவ் வீரன்.

பரஞ்சோதி மௌனம் சாதித்தான்.

அவனுடைய மௌனத்தைப் பாராட்டி அவ் வீரன் தலையை ஆட்டிவிட்டு மேலே சொன்னான்:

"விசித்திர சித்தர் அந்தக் காலத்தில் மிக மிக விசித்திரமான எண்ணங்களைக் கொண்டிருந்தார். உலகத்தில் யுத்தம் என்பதே கூடாது. பகைமையும் துவேஷமும் இருக்கக்கூடாது. எல்லா ஜனங்களும் சிற்பம் முதலிய கலைகளில் ஈடுபட்டு

ஆடல் பாடல்களில் ஆனந்தமாய்க் காலம் கழிக்க வேண்டும் என்ற எண்ணங்கள் அவர் மனத்தில் குடி கொண்டிருந்தன. நமக்கு இருக்கிற இராஜ்யம் போதும், அதிகம் என்னத்திற்கு என்ற வைராக்கியத்தையும் கொண்டிருந்தார். அப்பேர்ப்பட்ட சமயத்தில் புலிகேசியிடமிருந்து சமாதானக் கோரிக்கையும் கிடைக்கவே, யுத்தத்தை நிறுத்தும்படி கட்டளை போட்டு விட்டார்."

"புலிகேசி எப்போது அரசன் ஆனான்?"

"சிற்றப்பன் மங்களேசன், ராஜ்யத்தின் மேலுள்ள ஆசையினால், புலிகேசியையும் அவன் தம்பிகளையும் சிறையில் போட்டிருந்தான். மங்களேசன் வைஜயந்தியின் மேல் படையெடுத்தபோது புலிகேசியும் அவன் தம்பிமார்களும் சிறையிலிருந்து தப்பி வெளியே வந்துவிட்டார்கள். தோல்வியடைந்து திரும்பிய மங்களேசனைக் கொன்றுவிட்டு வாதாபி மன்னனாகப் புலிகேசி மூடி சூட்டிக் கொண்டான். உடனே காஞ்சிச் சக்கரவர்த்திக்குச் சமாதானத்

தூது அனுப்பினான். நாக சர்ப்பத்துடன் சமாதானம் செய்துகொண்டது போல் அந்தப் பாதகனுடன் மகேந்திர சக்கரவர்த்தியும் அப்போது சமாதானம் செய்து கொண்டார். அதனுடைய விபரீதப் பலனை இப்போது அனுபவிக்கிறார்."

"என்ன விபரீதப் பலன்...?"

"விபரீதப் பலன் என்னவா? புலிகேசியின் சைனியங்கள் இந்த யுத்தத்தில் வைஜயந்தியைக் கைப்பற்றிக் கொண்டு மேலேறி வருகின்றன என்று உனக்குத் தெரியாதா? இன்னொரு பயங்கரமான செய்தி கேள்விப்படுகிறேன். வைஜயந்தி பட்டணத்தைக் கைப்பற்றியவுடனே, புலிகேசி அந்த நகரிலிருந்த செல்வங்களையெல்லாம் கொள்ளையடித்து, நகரையே கொளுத்தும்படியாகக் கட்டளையிட்டான் என்று தெரிகிறது. இதை என்னால் நம்பவே முடியவில்லை. ஒருவேளை உண்மையாயிருந்தால்...?"

"இருந்தால்...?"

"உண்மையாயிருந்தால், 'காஞ்சி மகேந்திரவர்மருக்கு இதுவும் வேண்டும். இன்னமும் வேண்டும்' என்றுதான் சொல்லுவேன். உலகத்தில் ராஜாக்களும் சக்கரவர்த்திகளும் 'போரிலே புலி' என்றும், 'சண்டையிலே சிங்கம்' என்று பட்டப் பெயர் வாங்குவார்கள். காஞ்சி சக்கரவர்த்தி 'சித்திரக்காரப் புலி' என்று பட்டம் பெற்றிருக்கிறார் அல்லவா? அவருக்கு இதெல்லாம் வேண்டியதுதானே!"

பரஞ்சோதி மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்தான். வைஜயந்தி பட்டணம் எரிக்கப்பட்ட செய்தி அவன் மனத்தைக் கலக்கியிருந்தது.

சற்றுப் பொறுத்து அவ் வீரன், "தம்பி! எங்கே போகிறாய், என்ன காரியமாகப் போகிறாய் என்று உன்னை நான் கேட்கவில்லை. ஆனால், இன்று ராத்திரி எங்கே தங்குவதாக உத்தேசம் என்று சொல்லுவதில் உனக்கு ஆட்சேபம் ஒன்றும் இராதே?" என்றான்.

"இந்த மலையைத் தாண்டியதும் அப்பால் ஒரு மகேந்திர விடுதி இருப்பதாகச் சொன்னார்கள். அதில் தங்கலாமென்று எண்ணியிருக்கிறேன். இருட்டுவதற்கு முன்னால் மகேந்திர விடுதிக்குப் போய்ச் சேர்ந்து விடலாமென்று நினைத்தேன்."

"ஆ! அதோ பார் வெளிச்சத்தை! நீ சொன்ன மகேந்திர விடுதி அந்த வெளிச்சம் தெரிகிற வீடுதான். நானும் இன்றிரவு அங்கேதான் தங்கப் போகிறேன்" என்றான் அவ்வீரன்.

## முப்பத்து இரண்டாம் அத்தியாயம்

# கும்பகர்ணன்

பிரயாணிகள் இருவரும் விடுதியை நெருங்கியபோது, அங்கே ஆயத்தமாகக் காத்திருந்த வீரர்கள் நால்வர் கையில் உருவிய கத்திகளுடன் பளிச்சென்று முன்னால் வந்து, "நில்!" என்றார்கள். விடுதியின் வாசலில் நின்ற இன்னொரு வீரன் கையில் பிரகாசமான தீவர்த்தியைப் பிடித்துக்கொண்டிருந்தான். அதன் ஒளியில் மற்ற நால்வருடைய கையிலும் இருந்த கத்திகள் மின்னித் திகழ்ந்தன.

அப்போது அந்தக் குதிரை வீரன் தன் அங்கியினுள்ளிருந்து ஏதோ ஓர் அடையாளத்தை எடுத்துக்காட்டவே, அந்த வீரர்கள் நால்வரும் சிறிது மரியாதையுடன் ஒதுங்கி நின்று அவனுக்கு வழி விட்டுப் பின்னால் வந்த பரஞ்சோதியை அணுகினார்கள். குதிரை வீரன் திரும்பிப் பார்த்து, "அவனும் என்னுடன் வருகிறான்!" என்று சொல்லவே, பரஞ்சோதிக்கும் அவர்கள் வழி விட்டார்கள்.

மூத்த பிரயாணி, விடுதித் தலைவனிடமும் மேற்சொன்ன அடையாளத்தைக் காட்டி, "நாங்கள் இருவரும் இன்று இரவு விடுதியில் தங்க வேண்டும். குதிரைகளுக்கும் தீனி வேண்டும்" என்றான்.

விடுதித் தலைவன் மற்ற வீரர்களைப் போலவே மரியாதையுடன் "அப்படியே

ஐயா!" என்று மறுமொழி கூறினான். இதெல்லாம் பரஞ்சோதிக்கு மிக்க வியப்பையளித்தது. அந்த வீரன் ஏதோ பெரிய இராசாங்க காரியமாகப் போகிறான் என்றும் பரஞ்சோதி ஊகித்துக்கொண்டான். ஒருவேளை பல்லவ சைனியத்தைச் சேர்ந்த பெரிய தளபதியாகக்கூட அவன் இருக்கலாம் என்றும் சந்தேகித்தான். தான் இப்போது ஏற்றுக்கொண்டிருக்கும் காரியம் ஒருவிதமாக முடிந்த பிறகு, இந்த வீரன் எங்கே இருந்தாலும் தேடிக் கண்டு பிடித்து இவனுடைய சிநேகிதத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை பரஞ்சோதிக்கு உண்டாயிற்று.

இருவரும் உணவு அருந்தியபோது, அவ்வீரன் பரஞ்சோதியைப் பார்த்து, "தம்பி! வைஜயந்தி யுத்தத்தைப் பற்றி உனக்குச் சொன்னேனல்லவா? அந்தக் காலத்தில் எனக்குக் கிட்டத்தட்ட உன் வயதுதான் இருக்கும். அப்போது ஒரு தடவை நான் இந்த விடுதியில் தங்கியிருக்கிறேன். அன்றிரவு எனக்கு ஒரு விசித்திரமான அனுபவம் ஏற்பட்டது!" என்றான்.

"அது என்ன?" என்று பரஞ்சோதி ஆவலுடன் கேட்டான்.

"தம்பி! இத்தனை நேரமும் நாம் ஒருவர் பெயரை ஒருவர் தெரிந்துகொள்ளாமலே பேசிக் கொண்டிருக்கிறோம். என் பெயரைத் தெரிவிப்பதில் எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. எனக்கு என் தாய் தந்தையர்கள் இட்ட பெயர் வஜ்ரபாஹு. ஆனால், என் சிநேகிதர்கள் என்னைக் கும்பகர்ணன் என்று அழைப்பார்கள். தூங்கினால் அப்படித் தூங்குவேன். இன்றுபோலவே அன்றைக்கும் நாளெல்லாம் பிரயாணம் செய்திருந்தபடியால் அசந்து தூங்கிவிட்டேன். அப்போது என்ன நடந்தது தெரியுமா?"

"ஏதாவது பிசாசு சொப்பனம் கண்டு உளறியடித்துக்கொண்டு எழுந்தீர்களாக்கும்!" என்று பரஞ்சோதி குறும்பாகக் கூறினான்.

அதைக் கேட்ட வஜ்ரபாஹு நகைத்துவிட்டு, "இல்லை இல்லை! அதைவிட ஆபத்தான விஷயம்! வீடு இடிந்து என் மேலே விழுந்துவிட்டது போல் சொப்பனம் கண்டு கண்ணை விழித்துப் பார்த்தபோது, ஐந்தாறு தடியர்கள் என் மேல் உட்கார்ந்து அமுக்கிக் கொண்டிருந்தார்கள். இரண்டு பேர் என் இடுப்பைத் தடவிக் கொண்டிருந்தார்கள். என்னத்திற்காகத் தெரியுமா?"

"ஐயா! என்னை ஞானதிருஷ்டியுள்ளவன் என்று நினைத்துக் கொண்டீர்களா? தாங்கள் சொல்லாவிட்டால் எனக்கு எப்படித் தெரியும்?" என்றான் பரஞ்சோதி.

"நல்லது, தம்பி! நான் சேனாதிபதி கலிப்பகையாருக்குக் கொண்டு போன ஓலையைத் தஸ்கரம் செய்வதற்காகத்தான். என் இடுப்பில் அந்த ஓலை இருக்குமென்று அந்த முரடர்கள் எண்ணினார்கள்!"

"ஆஹா!" என்றான் பரஞ்சோதி. அவனை அறியாமல் அவனுடைய வலது கை இடுப்பைத் தொட்டுப் பார்த்தது. இது ஒரு கணந்தான்; மறுகணம் கை பழைய நிலையை அடைந்தது.

ஆனால், அந்த ஒரு கணநேரச் செய்கையை வீரன் வஜ்ரபாஹுவின் தீவிரமான கண்கள் கவனிக்காமல் போகவில்லை.

"அப்புறம் என்ன ஆயிற்று, ஐயா! அந்த முரடர்களுக்குத் தாங்கள் கொண்டு போன ஓலை கிடைத்ததா?" என்று பரஞ்சோதி கேட்டான்.

"ஓலை கிடைக்கவில்லை. என்னுடைய கை முஷ்டியினால் தலைக்கு ஏழெட்டுக் குட்டுக்கள் கிடைத்தன! பெற்றுக்கொண்டு தலை தப்பியது தம்பிரான் புண்ணியமென்று ஓட்டம் பிடித்தார்கள்!"

பரஞ்சோதி சிரித்துவிட்டு, "அந்த முட்டாள்களுக்கு நன்றாய் வேண்டும்! உங்களுடைய கும்பகர்ணத் தூக்கத்தைக் கலைத்தார்கள் அல்லவா? யாராவது ஒருவன் தனியாக வந்து இடுப்பைத் தடவியிருந்தால் ஒருவேளை ஓலை கிடைத்திருக்கும்" என்றான்.

"அப்போதும் கிடைத்திராது" என்றான் வஜ்ரபாஹு.

"ஏன்? நீங்கள் கும்பகர்ணன் மாதிரி தூங்குவேன் என்று சொன்னீர்களே?"

"உண்மைதான், தம்பி! ஆனால், ஓலை இடுப்பில் இருந்தால்தானே கிடைக்கும்?"

"பின், வேறு பத்திரமான இடத்தில் அதை வைத்துக்கொண்டிருந்தீர்களா?"

"ஆமாம், அக்கினி பகவானிடமே ஒப்படைத்துவிட்டேன்."

"இதென்ன? நல்ல தூதராயிருக்கிறீர்களே? ஓலையை நெருப்பிலே போட்டுவிட்டு எதற்காகப் பிரயாணம் செய்தீர்கள்?"

"ஓலையை நெருப்பிலே போடுவதற்கு முன்னால் அதைப் படித்து விஷயத்தை மனத்தில் பதிய வைத்துக்கொண்டேன்."

"ஓஹோ! இராஜாங்க தூதர்கள் அப்படிக் கூடச் செய்யலாமா என்ன?"

"சமயோசிதமாகக் காரியம் செய்யத் தெரியாதவன் இராஜாங்க தூதனாக இருக்கவே அருகனில்லை. தம்பி! இம்மாதிரி அபாயம் ஏதாவது நேரலாமென்று நான் எதிர்பார்த்தேன். எனவே, முன் ஜாக்கிரதையாகக் காரியம் செய்தேன். அதற்காகச் சக்கரவர்த்தியிடமிருந்து எனக்கு வெகுமதியும் கிடைத்தது."

இதையெல்லாம் கேட்ட பரஞ்சோதியின் உள்ளம் பெரிதும் குழப்பத்துக்கு உள்ளாயிற்று. இரவில் விடுதிகளில் தங்க நேர்ந்தால், மற்றவர்கள் படுக்கும் அறையில் படுக்கக்கூடாது என்று புத்த பிக்ஷு எச்சரித்தது அவனுக்கு ஞாபகம் வந்தது.

நல்லவேளையாக அன்றிரவு படுத்துக்கொள்வதற்கு அவனுக்குத் தனி அறையே கொடுத்தார்கள். வஜ்ரபாஹுவும், "தம்பி! இனிமேல் உன் வழி வேறு; என் வழி வேறு. நான் அதிகாலையில் எழுந்துபோய் விடுவேன். உன்னை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. எப்போதாவது உதவி தேவையிருந்தால் என்னிடம் வரத் தயங்காதே!" என்று சொல்லி விடைபெற்றுப் படுக்கச் சென்றான்.

பரஞ்சோதி படுத்துக்கொள்ளும் போது, வஜ்ரபாஹு கூறிய அனுபவம் அவனுக்கு ஞாபகம் இருந்த படியால், அயர்ந்து தூங்கி விடக் கூடாது என்றும், ஏதாவது சத்தம் கேட்டால் பளிச்சென்று எழுந்துவிட வேண்டுமென்றும் மனத்திற்குள் சங்கல்பம் செய்துகொண்டான். ஆனால், வாலிபப் பருவமும், நாளெல்லாம் பிரயாணம் செய்த களைப்பும் சேர்ந்து, படுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் அவனை நித்திரையில் ஆழ்த்திவிட்டன.

எனினும் அவனுடைய தூக்கம் அமைதியான தூக்கமாக இருக்கவில்லை. பயங்கரமான கனவுகள் மாறி மாறித் தோன்றிக்கொண்டிருந்தன. செந்நிறப் புரசம் பூக்கள் நிறைந்த பிரதேசத்தில் ஆவி வடிவத்துக் குதிரை வீரர்களுக்கு மத்தியில் தானும் ஓர் ஆவி வடிவமாகி ஓயாது சுற்றி அலைந்துகொண்டிருந்ததாக அவனுக்குத் தோன்றியது. அலைந்து அலைந்து களைத்துப் போன பிறகு ஒரு மலைக் குகையில் அவன் போய்ப் படுத்துக்கொள்கிறான். கனவிற்குள் தூங்குவதாகக் கனவு காண்கிறான்! ஆனால், அந்தத் தூக்கத்திலும் நினைவு இருந்து கொண்டிருக்கிறது. கண்கள் மட்டும் மூடியிருக்கின்றன. பிசாசுகள் ஒன்று மாற்றி ஒன்று வந்து அவனுடைய இடுப்பைத் தடவுகின்றன. 'நல்லவேளை, ஓலை இடுப்பில் இல்லை. தலைக்கு அடியில் வைத்துக்கொண்டிருக்கிறோம்' என்று தோன்றுகிறது. கண்ணைத் திறந்து பார்த்தால் அந்தப் பிசாசுகள் ஓடி விடுமென்று அவன் எண்ணுகிறான். ஆனால், எவ்வளவு முயன்றும் கண்களைத் திறக்கவே முடியவில்லை.

அப்புறம் எங்கேயோ வெகு தூரத்தில் ஒரு கொள்ளிவாய்ப் பிசாசு காணப்படுகிறது. அதை அழைத்துக்கொண்டு ஒரு கரும்பிசாசு அவனை நோக்கி வருகிறது. அருகே, அருகே, அருகே அவை நெருங்கி வந்துகொண்டிருக்கின்றன! கொள்ளிவாய்ப் பிசாசின் வாயிலுள்ள தீயின் ஒளியினால் அவனுடைய மூடியுள்ள கண்கள் கூசுகின்றன. கடைசியில், அந்த ஒளியின் கடுமையைப் பொறுக்க முடியாமல் கண்ணிமைகள் திறந்துகொள்கின்றன.

ஆனால், எதிரில் வந்தவை கொள்ளிவாய்ப் பிசாசும் இல்லை. கரும் பிசாசும் இல்லை என்பதை அவனுடைய திறந்த கண்கள் தெரிவிக்கின்றன. வீரன் வஜ்ரபாஹுவும், அவனுக்குப் பின்னால் கையில் விளக்கு ஏந்திக்கொண்டு அந்த விடுதியில் தலைவனுந்தான் வந்துகொண்டிருந்தார்கள்!

பரஞ்சோதி திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அவனுடைய வலது கை, அருகில் கிடந்த வேலைப் பற்றியது.

(தொடரும்)









# தீபாவளி ரேஸ்!

தீபாவளி என்றாலே கோடம்பாக்கத்துக்கு குதூகல தினம்! இந்தத் தினத்தில் ஒவ்வொரு ஆண்டும் சுமார் பத்துப் படங்களாவது வெளிவரும். இந்த வருடமும் 'ஆளவந்தான்', 'நந்தா', 'தவசி', 'ஷாஜகான்', 'பார்த்தாலே பரவசம்' 'ஆண்டான் அடிமை' 'மனதைத் திருடி விட்டாய்', 'பொன்னான நேரம்', 'அல்லி அர்ஜுனா', 'ரெட்', 'நேற்று வரை நீ யாரோ' உட்பட பத்துக்கும் மேற்பட்ட படங்கள் போட்டிக்குத் தயாராக இருந்தன.

தீபாவளி நெருங்க நெருங்க எண்ணிக்கை குறைந்து, இப்போது ஒன்பது படங்கள் மட்டுமே வெளிவரவிருப்பதாக கோடம்பாக்க வட்டாரத்தில் தகவல் அடிபடுகிறது. பட்டியலில் இருந்த 'ரெட்' மற்றும் 'அல்லி அர்ஜுனா' டிசம்பர் மாதத்துக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கின்றன.

ஆக இறுதிப் பட்டியலில் ஒன்பது படங்கள்.

இந்த எண்ணிக்கையும் கூட குறையலாம். பணப் பிரச்னை, தியேட்டர் கிடைப்பதில்





சிக்கல் போன்ற காரணங்களால் கடைசி நிமிடங்களில் ஒன்றிரண்டு படங்கள் வெளிவராமல் போகவும் வாய்ப்பு உண்டு.

சரி, வரவிருக்கும் படங்கள் பற்றி முன்னோட்டச் சுருள்.

நந்தா : 'சேது' என்ற வித்தியாசமான படத்தைக் கொடுத்ததன் மூலம் திரை உலகினரை மட்டுமின்றி ரசிகர்களையும் தன் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்த இயக்குநர் பாலாவின் இரண்டாவது படம். அதனாலேயே ஆளவந்தானுக்கு நிகரான எதிர்பார்ப்பை ஏற்படுத்தியிருக்கிறது. படம் பூஜை போடப்படுவதற்கு முன்பே சுமார் பத்து கோடிக்கு வாங்க பலர் தயாராக இருந்தனர். தயாரிப்பாளர்களோ சொந்தமாக வெளியிடும் எண்ணத்தில் படத்தை விற்க மறுத்து விட்டனர். இத்தனைக்கும் 'நந்தா' படத்தின் பட்ஜெட் நான்கு கோடிதான். 'சேது' படத்தில் பாண்டி மடம் என்ற பகுதியைக் காட்டி படம் பார்ப்பவர்களைக் கலங்க வைத்த பாலா, 'நந்தா' படத்தில் ராமேஸ்வரம் அகதிகள் முகாமை நம்



கண் முன் நிறுத்தியுள்ளாராம். படத்தின் நாயகியான லைலா, இலங்கை அகதிப் பெண். ராமேஸ்வரத்தைச் சேர்ந்த வாலிபன் சூர்யா. இவர்களுக்கிடையே மலரும் காதல் மற்றும் ராஜ்கிரண் – சூர்யா இடையேயான உறவுதான் 'நந்தா.'

**ஆளவந்தான்** : கலைப்புலி தாணு தயாரிப்பில், சுரேஷ்கிருஷ்ணா இயக்கத்தில் கமல் நடித்திருக்கும் இந்தப் படம்தான் தீபாவளி படங்களில் அதிக எதிர்பார்ப்பை ஏற்படுத்தியிருக்கும் படம். 'ஆளவந்தான்' மாபெரும் சாதனையை நிகழ்த்தியிருக்கிறது. அதாவது இதுவரை வெளிவந்த தமிழ்ப் படங்களிலேயே அதிக தொகைக்கு அதாவது சுமார் இருபத்தைந்து கோடிக்கு விற்பனையான படம் இதுதான்.

தமிழில் எத்தனையோ இரட்டையர் கதைகள் வந்திருக்கின்றன. ஆளவந்தானும் ஓர் இரட்டையர் கதை. முற்றிலும் வித்தியாசமான கதையாக இதை வடித்திருக்கிறார் கதாசிரியர் கமல்ஹாசன். பல வருடங்களுக்கு முன் 'இதயம் பேசுகிறது' இதழில் கமல் எழுதிய 'தாயம்' என்ற தொடர் கதைதான் இது.

கதாசிரியராக சர்வதேச தரத்தில் சிந்தித்திருக்கும் கமல், நடிகராக பல புதிய முயற்சிகளை 'ஆளவந்தான்' படத்தில் மேற்கொண்டதன் மூலம் தமிழ் சினிமாவை உலகதரத்துக்கு உயர்த்தியிருக்கிறார். நந்தகுமார் என்ற மனநோயாளியான குற்றவாளி பாத்திரத்தில் கமல் நடிப்பு பரபரப்பாய்ப் பேசப்படுவதாக இருக்கும்.

**தவசி** – பாகிஸ்தான் தீவிரவாதிகளோடு மோதி விஜயகாந்துக்கு போரடித்து விட்டது போலும். இதில் சின்னக்கவுண்டர் பாணியில் வேட்டி சட்டை அணிந்து நடித்திருக்கிறார். வழக்கம் போல் அப்பா - மகன் என இரட்டை வேடம். பஞ்சாயத்தில் அப்பா வழங்கிய தீர்ப்பை எதிரிகள் அவருக்கு எதிராகத் திருப்பிவிட, நிலைகுலைந்து போகிறார். ஆபத்பாந்தவனாக மகன் புகுந்து அப்பாவுக்கு ஏற்பட்ட இக்கட்டை எதிர் கொண்டு அவரைச் சிக்கலிலிருந்து காப்பாற்றுகிறார். சௌந்தர்யா, ஜெயசுதா, பிரதியுஷா என படத்தில் மூன்று நாயகிகள். இயக்குநர் உதயஷங்கர், தமிழில் 'பூச்சூடவா' என்ற தோல்விப் படத்தையும், தெலுங்கில் இரண்டு வெற்றிப் படங்களையும் தந்தவர்.

**ஷாஜகான்** : சூப்பர் குட் பிலிம்ஸ் தயாரிப்பில் விஜய் நடித்திருக்கும் படம். இயக்கம் புது இயக்குநர் ரவி. தலைப்பைப் பார்த்தாலே தெரிகிறது. காதல் கதைதான் இந்தப் படமும். நண்பர்களுக்கு காதல் தூது போவதை வழக்கமாக வைத்திருக்கும் விஜய், சக மாணவி ரிச்சா பலோட்டை காதலிக்கிறார். லெட்டரைக் கொடுக்கப் போகும் விஜய்யிடம், தான் ஒருவரைக் காதலிப்பதாக வேண்டுகோள் விடுத்து ஒரு காதல் கடிதத்தைக் கொடுத்து காதல் தூது போகச் சொல்கிறார் ரிச்சா! உடைந்து போகும் விஜய், ரிச்சா சொன்னதைச் செய்கிறார். அப்புறம்? ரிச்சா விஜய் இருவரும் எப்படி இணைகிறார்கள் என்பது மீதிக் கதை.

**பார்த்தாலே பரவசம்** : சின்னத் திரையிலேயே செட்டிலாகி விட்ட கே. பாலசந்தர் நீண்ட இடைவெளிக்குப் பின் இயக்கியுள்ள படம். தவிர அவரது நூறாவது படம். அதனால் 'பார்த்தாலே பரவசம்' படத்திற்கும் ஏகப்பட்ட எதிர்பார்ப்பு. அதைப் பூர்த்தி செய்யுமளவுக்கு படத்தில் விஷயம் உண்டு என்று கேள்வி. எமோஷனலான சம்பவங்கள் நிறைய இருப்பதாகக் கேள்வி.

படத்தின் நாயகன் மாதவனுக்கு டாக்டர் வேடம். இவருக்கு ஜோடி சிம்ரன். இன்னொரு நாயகி சினேகா. இவர்கள் தவிர டான்ஸ் மாஸ்டர் லாரன்ஸ் கதாநாயகனாக பிரமோஷன் பெற்றிருக்கிறார். விவேக்கின் நகைச்சுவை படத்தின் பலம் என்று செய்தி.

**மனதை திருடி விட்டாய்** : 'மனதை திருடி விட்டாய்' படம் வந்த பிறகு விவேக் வடிவேலு கூட்டணி கவுண்டமணி செந்தில் போல் பல வருடங்கள் கலக்கப் போகிறார்கள் என்று சொல்லாத ஆளே இல்லை கோடம்பாக்கத்தில். மெயின் கதை? அது வழக்கமான காதல் கதைதான். காயத்ரி ஜெயராமை காதலிக்கும் பிரபுதேவா அவரைத் திருமணம் செய்து கொள்ள இருக்கும்

நேரத்தில் கௌசல்யாவைச் சந்திக்கிறார். யாரோ ஒருவனால் சிதைக்கப்பட்டவர் அவர். அவருடன் பழகும்போதுதான் பிரபு தேவாவுக்குத் தெரிகிறது. அந்தக் கொடுமையை இழைத்ததே தான்தான் என்று. அப்புறம் என்ன? காதலியைத் தியாகம் செய்துவிட்டு கௌசல்யாவைக் கைப்பிடிக்கிறார். புது இயக்குநர் நாராயண் மூர்த்தி இயக்கியிருக்கும் இந்தப் படம் பிரபு தேவா இழந்த மார்க்கெட்டைத் தூக்கி நிறுத்தும் என்று சொல்கிறார்கள்.

**ஆண்டான் அடிமை** : 'அமைதிப்படை' போல் மிகப் பெரிய வெற்றியடையும் என்று திரையுலகம் ஆருடம் சொல்கிறது இந்தப் படத்தைப் பற்றி. காரணம் சத்யராஜ் - மணிவண்ணன் காம்பினேஷன்! இவர்கள் காம்பினேஷன் என்றாலே ஒரு காலத்தில் வெற்றிக் கூட்டணி. இப்போது மீண்டும் இருவரும் இணைந்திருக்கிறார்கள். பொதுஉடைமைதான் படத்தின் மையக் கரு. குறிப்பாக சாதி வேற்றுமைகளைச் சாடி கட்சிகளை அமைத்திருக்கிறாராம் மணிவண்ணன்.

**பொன்னான நேரம்** : வழக்கமான ராமராஜன் படங்களைப் போல் இல்லாமல் சற்று வித்தியாசமாக எடுக்கப்பட்டிருக்கிறதாம். முக்கியமாக ராமராஜனின் கேரக்டர். மாறுபட்ட போலீஸ் அதிகாரியாக நடித்திருக்கிறார். ஆனால் காந்தியவாதி அவர். அட, காந்தியவாதி போலீஸ்காரரா! ராமராஜன் கடைசியாக நடித்த 'சீறி வரும் காளை' நாற்பது லட்சம் பட்ஜெட்டில் தயாராகி பி அண்ட் சி ஏரியாக்களில் பெரிய அளவில் வசூல் செய்தது. அதைத் தொடர்ந்து இந்தப் படம். ஒரு கோடி செலவு செய்யப்பட்டிருக்கிறது. பிசினஸும் அதிகம்தான். மற்ற ராமராஜன் படங்களைவிட இந்தப் படம் பெரிய விலைக்கு விற்கப்பட்டிருக்கிறதாம்.

**நேற்று வரை நீ யாரோ?** : ரவிசந்திரனின் மகன் அம்சவிர்தன் நடித்து, பல மாதங்களாக கிடப்பில் கிடந்து, ஒருவழியாக ரிலீஸாகிறது. பெங்களூர் மங்கையான ருசிதா பிரசாத் நாயகி. டாக்டர் ஸ்ரீதர் இயக்கியுள்ள இந்தப் படம் ஒரு கல்லூரிக் காதல் கதை. ஸ்காலர்ஷிப்பில் மருத்துவக் கல்லூரியில் படிக்கும் ஏழை மாணவரான அம்சவிர்தன், பணக்கார வீட்டுப் பெண் ருசிதா பிரசாத்தை காதலிக்க... வழக்கம் போல் வீட்டில் எதிர்ப்பு. காதலர்கள் இணைகிறார்களா என்பதே கதை. வழக்கமான கதையாக இருந்தாலும் திரைக்கதையில் புதுமை இருப்பதாகச் சொல்கிறார் இயக்குநர்.

— ஜெ.பிஸ்மி

"சாக்ஸஃபோனிலிருந்து எப்படி இவர் இப்படிப்பட்ட இசையை வரவழைத்தார்?" ஆலன் ஆச்சரியப்பட்டான்.

எஸ்.பி. பாலாவும், சித்ராவும், சுதிரியுமாய் அந்த 'மீடியா ரூமில்' சுற்றிலும் பதிக்கப்பட்டிருந்த ஸ்பீக்கர்கள் இசை பொழிந்து கொண்டிருந்தன.

ரஹ்மானின் இந்திய இசை கேட்க வேண்டும் என்று ஆலன் வந்து சேர்ந்து ஒரு மணி நேரம் ஆகியிருக்கும். ஆஸ்பெனுக்கு அப்புறம் இன்றுதான் அவனை நேரில் பார்க்கிறாள். நடுவில் எத்தனையோ மணி நேரம் ஃபோன் பேச்சுகள். பள்ளிக்கூடம், நண்பர்கள், திரைப்படம், இசை, டென்னிஸ் இப்படிப் பேசுவதற்கு எவ்வளவோ இருக்கிறதே. மின்னி செல்லமாகக் கோபித்துக் கொண்டாள்.

"வரவர என்னிடம் நீ அதிகம் போன் பேசுவதில்லை!"

வீட்டுப்பாடம் முடிந்த பிறகுதான் போன் என்ற அம்மாச் சட்டத்தை உடைக்காத வரைக்கும் அம்மா கோபித்துக் கொள்ள மாட்டாள்.

ஆஸ்பெனில் இருந்த படபடப்பு கொஞ்சம் குறைந்திருந்தது. ஆனாலும் ஒவ்வொரு சாயந்திரமும் பேசுவதை எதிர் பார்த்திருப்பது பழகிப் போயிருந்தது - அதற்குள். ஆலன்தான் அப்போது ரஹ்மான் பாட்டுக்கள் பற்றி நினைவுபடுத்தினான். அந்த ஒரு நாள் விடுமுறைக்கு முந்தின சாயங்காலம் வாயேன் என்றாள்.

ஆலனைப் பாட்டுக் கேட்க வீட்டுக்குக் கூப்பிட்டிருப்பதாய் அம்மாவிடம் சொன்னதும், அம்மா 'சரி' என்றாள். பாட்டுகள் குறித்துக் கொடுக்க ஆரம்பித்தாள். அனுகாவுக்குக் கொஞ்சம் ஆச்சரியமாய் இருந்தது. கொஞ்சம் யோசித்துப் பார்த்ததில், அந்த ஆச்சரியம் எவ்வளவு அனாவசியம் என்பது புரிந்தது. ஒரு நண்பனை வீட்டுக்குக் கூப்பிடுவது பற்றி



7 இக்க

அம்மாவுக்குப் பிரச்னை இல்லை. நண்பன் தானே... நிறுத்தினாள். நண்பன்தானா?

கதவைத் திறந்தது, ஆலனை இறக்கி விட்டுப் போகும் மார்ஜிக்குக் கையாட்டி விடை கொடுத்தது எல்லாம் கனவு மாதிரி. ஆலனிடம் என்ன பேசுவதென்று தெரிய வில்லை. மணிக்கணக்கில் போனில் பேச முடிகிறது. நேரில் பார்க்கும்போது வார்த் தையைக் காணோம்.

"அழகு!" வீட்டுக்குள் நுழைந்ததும் வரவேற்று நிற்கும் ஆளுயரப் பாவை விளக்கை ஆலன் அழகு பார்த்துக் கொண்டிருந்தான். பாவையின் தலை அலங் காரம், ஆடையின் நெளிவு கள்... அடுக்கிக் கொண்டே போனான். அவனுக்குமே என்ன பேசுவதென்று தெரிய வில்லை என்பது அனுகாவுக் குப் புரியாமல் இல்லை.



"ஆலன், எங்கள் வீட்டில் இருக்கும் கலைப் பொருள் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அல்லது ஏதாவது சாப்பிட்டு விட்டுப் பாட்டுக் கேட்கப் போக லாம்." ஆலன் சாப்பிட ஒன்றும் வேண்டாம் என்றான்.

"மீடியா ரூமுக்குப் போகலாமா? என்னு டைய தனிப்பட்ட சி.டி., வீடியோ தவிர மற்றதெல்லாம் அங்கேதான் இருக்கின்றன."

மீடியா ரூமுக்குள் நுழைந்தவுடன், அங்கி ருந்த ஒவ்வொரு எலெக்ட்ரானிக் தளவாடத் தையும் உன்னிப்புடன் அவன் உற்று உற்றுப் பார்க்க ஆரம்பித்தது அனுகாவுக்குச் சிரிப் பாக இருந்தது.

"என்ன ஆலன், எதையாவது விலைக்கு வாங்கப் போகிறாயா?"

முகத்தின் தீவிரம் மறையாமல் ஆலன் அவள் பக்கம் திரும்பினான்.

"இன்றைய இசையை எதில் கேட்கிறோம் என்பதும் முக்கியம், அனுகா. எவ்வளவு நுணுக்கத்தோடு ஸ்டுடியோவில் பதிவு செய்கிறார்கள்!"

"வீடு கட்டும்போதே என் அம்மாதான் 'சவுண்ட் சிஸ்டம்' பற்றி நிறைய படித்து, எதில் எது நல்லது என்று முடிவு செய்தது. அதனால்தான் எல்லாம் ஒரே 'ப்ராண்ட்' ஆக இல்லாமல், கதம்பமாக இருக்கிறது. இதோ, சில ரஹ்மான் சி.டி.கள். போட்டுப் பார். அம்மா சில பாட்டுக்களை உனக்காகக் குறித்துக் கொடுத்திருக்கிறாள்."

'கண்டு கொண்டேன்... கண்டு கொண்டேன்...' ஆலன் பாட்டுக்களில் மூழ்கிப் போனான். முகம் வேறு உலகத்தில் அவன் இருப்பதைக் காட்டியது.

அம்மா சவுண்ட் சிஸ்டத்துக் காகச் செய்த ஆராய்ச்சி பற்றி அனுகா நினைத்துப் பார்த்தாள். அம்மா பற்றி அவளுக்குள்ள ஆச்சரியங்களில் இதுவும் ஒன்று. எதையும் ஆழமாகத் தெரிந்து கொள்ள முயற்சிப்பவள்.

காஞ்சனா தாமோதரன்

அம்மா இத்தனை தமிழ் சி.டி.கள் வைத் திருப்பதுமே ஆச்சரியம்தான். அவளுக்கு இருக்கும் வேலைகளுக்கு நடுவே எப்படி இதைக் கேட்பதற்கு நேரம் ஏற்படுத்திக் கொள்கிறாள்.

ஒரு நாள் வீட்டுப் பாடம் முடித்துப் புத்த கங்களைப் பைக்குள் திணிக்கும்போது ஒரு புத்தகத்தைக் காணவில்லை. வீட்டின் மேல் இரண்டு தளங்களிலும் தேடி விட்டுக் கீழ்த் தளத்தில் தேடும்போது மீடியா ரூமிலிருந்து மென்மையான இசை. நடுநிசி நேரம். அப்பாவும் அம்மாவும் இன்னும் தூங்கவில் லையா. 'ஹாய்', என்று வழக்கம் போல் கத்திக் கொண்டே உள்ளே நுழைய நினைத்த வனை ஏதோ ஓர் உணர்வு தடுத்து நிறுத்தி யது.

மென்மையான ஒளி. பின்னணியில் தமிழ்ப்பாட்டு. அப்பாவுக்குப் புரியாத தமிழ்ப்பாட்டு. அம்மாவும் அப்பாவும் அரு கருகே உட்கார்ந்து தத்தம் 'லேப்டாப்'புகளில் மும்முரமாக வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். இரவுச் சாப்பாடும் பேச்சும் விளையாட்டும் முடிந்ததும் எல்லா ரும் அவரவர் வேலைகளைப் பார்ப்பது வழக்கம்தான். ஆனால், அந்தக் கணத்தில், வார்த்தையே இல்லாத அந்த இதமானச் சூழலில், ஓர் அமைதியான நட்பு நிறைந் திருப்பது அவனுக்குக் கூடப் புரிந்தது.

ஓசைப்படாமல் தன் அறைக்குத் திரும்பும் போது அவனுக்குள் ஏதோ ஒரு நிறைவு, டிசெம்பர் குளிரில் கம்பளிக்கு அடியில் சுருண்டிருப்பது போல் ஒரு பாதுகாப்பான உணர்வு. இப்போது எந்தத் தமிழ்ப் பாட் டைக் கேட்டாலும் அந்தக் குறிப்பிட்ட கணமும், அது தரும் இதமும் ஞாபகத்துக்கு வராமல் இருப்பதில்லை.

"அனுகா.... அ...னு...கா... பூமியிலிருந்து அனுகாவுக்கு அழைப்பு... உடனே கீழே இறங்கி வரவும்." ஆலனின் விளையாட்டுக் குரல்.

"நானா பூமியில் இல்லாமல் போனேன்! இசை கேட்கும் போது உன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்திருக்கிறாயா, ஆலன்? அப்படியே உருகிப் போய்... என்ன பரவசம்... ஹ்ம்ம்ம் ... சரி, எந்தப் பாட்டு பிடித்திருந் தது?"

ஆலனின் முகத்தில் மீண்டும் அந்தத் தீவிரம். குரலில் அந்தப் பரபரப்பு. "இந்த மனிதர் உலகத்தில் எந்த வகை இசையையும் விட்டு வைத்திருக்கிறாரா? எனக்கு வார்த்தை வரவில்லை, அனுகா...."

> "அப்பா இந்த வெடிகள் ரொம்ப 'சவுண்டு' இல்லாமல் வெடிக்குது. நீங்க 'சவுண்டு இன்ஜினியர்' ஆச்சே இதில் என்ன மிஸ்டேக் என்று பாருங்க...!"
> – விஜயலட்சுமி வெங்கடாசலம்

"என் கேள்விக்குப் பதில் சொல், ஆலன். எந்தப் பாட்டு ரொம்பப் பிடித்தது?"

"அனுகா, நீ செய்வது நியாயமா? பாட்டை ஒரு தரம்தானே கேட்டிருக் கிறேன்..."

"சொல்லப் போகிறாயா, இல்லையா?"

தொலைபேசி மணி. அம்மா. வரக் கொஞ்சம் நேரமாகுமாம். சாலையில் ஏதோ விபத்து.

அப்பா வந்தாயிற்றா. இல்லையா. ஆலன் வந்தாயிற்றா. சி.டி. கேட்டானா. இன்னும் இருக்கிறானா. சரி. பசிக்கிறதா. நொறுக் குத்தீனி ஏதாவது சாப்பிடுங்கள். ஆலனுக்குப் பிட்ஸா சரி என்றால், உனக்கும் சரி என் றால், ஆலனையும் இருந்து நம் கூடவே சாப்பிடச் சொல். ஒரு வழியாகக் கார் இப் போதுதான் நகரத் தொடங்குகிறது. இன்னும் அரை மணி நேரத்தில் பார்க்கலாமா?

சி.டி.கள் சூழ, கம்பளத் தரையில் சம்மணம் கட்டி உட்கார்ந்திருந்த ஆலனை நோக்கி நடந்தான்.

"என் அம்மாதான். இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவாள். சரி, சொல், சொல், சொல். எந்தப் பாட்டு, எந்தப் பாட்டு?"

ஆலன் சி.டி. தட்டில் ஐந்து சி.டி.களைப் போட்டு வைத்திருந்தான். ஒரு குறிப்பிட்ட சி.டி.யில் குறிப்பிட்ட பாட்டைத் தேர்ந் தெடுத்தான்.

"இதைக் கேட்டுப் பார். ஒரு கிடாரைத் தவிரவேறு எந்த இசைக் கருவியும் இல்லை. அழகான 'கோரல் பீஸ்.' குரல்கள் என்ன மாய்ச் சேர்ந்து பாடுகின்றன! ஒரு குழு ஒரு வரியைப் பாடி முடிப்பதற்கு முன், இன் னொரு கட்டையில் பாடுகிறார்." மூச்சு விடவில்லை அவன்.

பாடல் தொடர்ந்தது.

"அனுகா, இந்தப் பாட்டுக்கு அர்த்தம் என்ன?"



அவள் இந்தப் பாட்டைக் கேட்டதே இல்லை என்று அவனிடம் ஒப்புக் கொள்ள முடியவில்லை. கொஞ்சம் கூர்ந்து கவனித் தாள். சில வார்த்தைகள் புரியவுமில்லை. அதையும் அவனிடம் ஒப்புக் கொள்ள அவமானமாய் இருந்தது. ஏன் அவமானம். அவளது உணர்வுகள் அவளுக்கே புரிய வில்லை. இதென்ன புதுக் குழப்பம்.

"சரி, சொல், சொல், சொல், என்ன அர்த் தம், என்ன அர்த்தம்?"

ஆலன் அவளைப் போலவே குரலையும் மாற்றிப்பேசிச் சிரித்தான்.

அவளுக்குக் கோபமும் வருத்தமும் சேர்ந்து வந்தது. "ஆலன், எனக்கு வார்த்தை களின் அர்த்தம் முழுதாகத் தெரியவில்லை."

ஆலன் முகத்தில் கொஞ்சம் ஆச்சரியம். மௌனம்.

"புரிந்ததைச் சொல்லேன், போதும்." குரல் மென்மையாகியிருந்தது.

அவள் சி.டி.யை மீண்டும் ஒரு முறை போட்டுக் கேட்டாள். சில இடங்களில் 'ட்ராக்' செய்து இரண்டு முறை கேட்டாள்.

"காதலி அவனை விட்டு விலகிப் போகிறாள். அவன் தன் உணர்வுகளைப் பற்றிப் பாடுகிறான். கிராமிய மொழி. 'நான் தந்த மல்லிகையை நட்டாற்றில் போட்டு விட்டு, அரளிப்பூச் சூடி அழுதபடி போற வளே' இந்த வரி எனக்கு அழகாய்த் தெரி கிறது." அவள் குரல் சுரத்தில்லாமல் வந்தது.

"அனுகா, மன்னிப்பாயா? உன் மனத்தை எப்படியோ புண்படுத்தி விட்டேன்."

அவளால் ஒன்றும் பேச முடியவில்லை.

"அனுகா..."

"ஆலன், நீ ஒன்றும் தப்பாகச் சொல்ல வில்லை."

"அழப் போகிறாயோ?" அவன் குரலில் பயமா. அனுகாவுக்குச் சிரிப்பு வந்தது.

"ஆலன், இப்போது எல்லாம் சரிதான். அடுத்த பாட்டைப் பற்றிச் சொல்."

ஆலன் கொஞ்ச நேரம் எதையோ நினைத்துக் கொண்டிருந்தான்.

"அனுகா, என்னுடைய முன்னோர்கள் பல தலைமுறைகளுக்கு முன்னால், பல ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் இங்கே வந்தவர்கள். அவர்கள் தாய்மொழி முதல் சில அமெரிக்கத் தலைமுறைகளோடு மறைந்து போயிற்று. என்னைப் பாரேன். இங்கிலீஷ், அப்புறம் நாம் பள்ளிக் கூடத்தில் படிக்கிற மொழிகள்... அவ்வளவுதான் தெரியும். முழுதாகத் தெரியவில்லைதான். ஆனாலும் உன் கலாசார வேர் மொழி உனக்குத் தெரிகிறது. பெருமைப்படு..."

அனுகா மெல்லப் புன்னகை செய்தாள். இவன் எதையும் சட்டென்று புரிந்து கொள் கிறான். எதிலும் நல்லதையே பார்க்கிறான். அவள் போன்றவர்கள் வெளித்தோல் ப்ரவு னாகவும், மனமும் நடப்பும் வெள்ளை அமெரிக்கன் போலவும் இருப்பதால் 'தேங்காய்' என்று சில பள்ளிப் பிள்ளைகள் கிண்டல் அடிப்பது அவனுக்குப் புரியாது.

"ஆலன், அடுத்த பாட்டு பற்றிச் சொல், சொல், சொல்..."

ஆலனின் முகத்தில் இசை மீண்டும் தெரிந்தது. "அனுகா, இந்தப் பாட்டைக் கேட் டுப் பார்."

எஸ்.பி.பாலாவும், சித்ராவும், கதிரியுமாய் அந்த 'மீடியா ரூமில்' சுற்றிலும் பதிக்கப்பட்டி ருந்த ஸ்பீக்கர்கள் இசை பொழிய ஆரம் பித்தன. "சாக்ஸஃபோனிலிருந்து எப்படி இவர் இப்படிப்பட்ட இசையை வரவழைத் தார்?" அப்போதுதான் ஆலன் ஆச்சரியப் பட்டுக் கேட்டான்.

"எந்த வகை சாக்ஸாக இருக்க முடியும் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். ஆனாலும், இப்படித் தொடர்ச்சியாக எப்படி 'நோட்ஸ்' வாசிக்கிறார்..."

"இசை வந்த திசை பார்த்து மனம் குழைந் தேன். தமிழ் வந்த திசை பார்த்து உயிர் கசிந்தேன்... அஞ்சலி... அஞ்சலி..." பாடல் தொடர்ந்தது.

"அனுகா, இந்தப் பாடலின் நோட்ஸ் உள்ள 'ஷீட் ம்யூசிக்' எங்காவது கிடைக்குமா? இசை தெரிந்த வேறு இந்திய நண்பர்கள் உனக்கு இருக்கிறார்களா? ஒரு பிரமாதமான ஐடியா வைத்திருக்கிறேன்."

ஆலன் உற்சாகமாகச் சொன்னான்.

(தொடரும்)

**'சமுத்திரம்' நன்றாகப் போவதில் மிகவும் சந்தோஷமாக இருக்கிறார் சரத்குமார். தூறல் போட்டுக் கொண்டிருந்த ஒரு மாலை நேரம் கொட்டிவாக்கத்தில் உள்ள அவரது வீட்டில் சரத்தைச் சந்தித்தோம்.**

**"திரையுலகில் முன்னணி நடிகர் – மற்றொரு பக்கம் முக்கிய அரசியல் கட்சியின் ராஜ்ய சபா உறுப்பினர் – திரைப் பிரசாரகர். இந்த இரட்டைக் குதிரை சவாரி எப்படிச் சாத்தியமாகிறது?"**

"இது ஒன்றும் கடினமான காரியம் அல்ல. திட்டமிடுதல் மூலம் கண்டிப்பாகச் சமாளிக்க முடியும். தொழில்ரீதியாக நான் ஒரு நடிகன். அதேசமயம் தி.மு.கவின் கொள்கைகளாலும், தலைவர் கலைஞராலும் ஈர்க்கப்பட்ட ஒரு



# ஒரு குதிரை சவாரி

தி.மு.க தொண்டன். கட்சி எனக்கு ராஜ்யசபா உறுப்பினர் பொறுப்பு கொடுத்து கௌரவித்திருக்கிறது. தொழிலில் நான் சிறப்பாகச் செயல்பட்டு மிகவும் பாப்புலராக இருக்க வேண்டும்; அப்போதுதான் நான் சார்ந்திருக்கும் இயக்கத்துக்கு என்னால் உதவ முடியும். அதேசமயம் ராஜ்ய சபாவிலும், முக்கியமான மசோதா விவாதங்கள் வரும்போது அங்கே ஆஜராகி என் கருத்தைச் சொல்ல வேண்டும்.

"வருடத்திற்கு 240 நாட்கள் நான் சினிமாவுக்கு ஒதுக்கினால்கூட மீதம் 120 நாட்களை அரசியலுக்கும், ராஜ்ய சபாவுக்கும் ஒதுக்கலாம். கட்டாயம் மூன்று படத்துக்கு கால்ஷீட் தர முடியும். அது போதாதா!

ராஜ்ய சபாவில் ஏதாவது அவசர அலுவல் காரணமாக ஆஜராக வேண்டுமானால், ஒரு நாள் தில்லி போய் வருவது என்பது இன்றைய நிலையில் சுலபமான விஷயம்தான்! ஆகவே என்னைப் பொறுத்த வரை ஒரு குதிரைச் சவாரிதான்.

**ராஜ்ய சபா அனுபவம் எப்படியிருக்கிறது?**

"அரசியல் ஆதாயங்களுக்காக சில நியமனங்கள் இருந்தாலும் ராஜ்ய சபா இன்றைக்கும் அறிஞர்கள் சபையாகத்தான் இருக்கிறது. அதில் நானும் ஒரு உறுப்பினராக இருப்பது குறித்து மிகப் பெருமைப்படுகிறேன். ஒரு மாணவனாகவே அந்த சபையினுள் நுழைந்திருக்கிறேன். பல்வேறு பிரச்னைகளில் எங்கள் கட்சியின் கருத்துக்கள் தெளிவாக இருக்கின்றன. அதை ஒட்டித்தான் நான் பேச வேண்டும். மேலும் வழிகாட்ட ஸீனியர்கள் இருக்கிறார்கள். ஆனால் ராஜ்ய சபாவில் பேசப்படும் பிரச்னைகள், நடக்கும் விவாதங்கள், நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் ஆகியவற்றின் சாரம் இறுதியாக நமது மக்களுக்குச் சென்று பயனளிக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்றுதான் வருத்தத்துடன் சொல்ல வேண்டியிருக்கிறது.

"நான் சபைக்குச் சென்று குறுகிய காலமே ஆகிறது. இருபத்தைந்து சதம்தான் கற்றுக் கொண்டிருக்கிறேன். எந்த ஓர் உறுப்பினர் நாட்டு நலன் பற்றி பிரச்னைகளை எழுப்பினாலும், அரசியல் காழ்ப்புணர்வுக்கு அப்பாற்பட்டு உறுப்பினர்கள் நல்ல கருதுக்களுக்கு ஆதரவு தெரிவிக்க

வேண்டும். எல்லோரும் என்னிடம் "கன்னிப் பேச்சு பேசியாச்சா...?" என்கிறார்கள். நமது கல்விக் கொள்கை பற்றி நான் முதன் முதலாகப் பேச இருந்த அன்றுதான் மூப்பனார் காலமாகி விட்டார். அதனால் நான் பேசுவது தள்ளிப் போயிருக்கிறது. 'இந்தி' விஷயத்தில் எங்கள் இயக்கத்தின் கொள்கை தெளிவாக இருந்தாலும் எனக்கு இந்தி தெரிந்திருப்பதால் பலருக்கு இயக்கத்தைப் பற்றிச் சொல்வதற்கும் எளிதாக இருக்



"சுமார் 5300 வோட்டுகளில்தான் எம்.பி தேர்தலில் தோற்றேன். நெல்லை மாவட்ட கழக உட்கட்சி விவ

# சவாரிதான்!"

கிறது. திரைத்துறை தொடர்பான எந்த பிரச்னையானாலும் என் கருத்துக்கள் அங்கே கண்டிப்பாக இடம் பெறும். திரைத் துறையைத் தொழிலாகப் பாவித்து வங்கிகள் கடன் கொடுக்க வேண்டும் என்று போராடி வெற்றி பெற்றுள்ளோம். ஆனால் அதை நடைமுறைப்படுத்துவதில் சில சிக்கல்கள் இருக்கின்றன. அவற்றை நீக்க முயல்வேன்."

**பாப்புலரான நடிகரான நீங்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு பாராளுமன்றத்தில் நுழைந்திருக்கலாமே!**

காரத்தாலும், கோவை குண்டு வெடிப்பு பாதிப்பாலும்தான் தோல்வி. தலைவர் ஒரு வேட்பாளரைப் போடும்வரை பல கருத்து வேறுபாடுகள், விவாதங்கள் இருக்கலாம். ஆனால் கட்சி ஒருவரை வேட்பாளர் என்று அறிவித்து விட்டால் கட்சிக்காரர்கள் அனைவரும் வேற்றுமைகளை மூட்டைக்கட்டி வைத்து விட்டு அவரை வெற்றி பெறச் செய்ய பாடுபட வேண்டும்.

**சின்னத்திரை திரையுலகத்துக்கு ஒரு**



'காதல் வைரஸ்' படத்தில் கே. பாலசந்தர் திரைப்பட இயக்குனராகவே நடித்திருக்கிறார். அவருடன் இயக்குனர்கள் விக்ரமன், ரவிகுமார், ராஜ்கபூர், சரண், கதிர் ஆகியோரும் நடித்துள்ளனர்.
– நிக்கி

கடும் சவாலை உண்டாக்கியிருக்கிறதே? முழு நேர பொழுதுபோக்கு சேனல்கள் 'தினசரி மூன்று படங்கள்' என்று விளம்பரப்படுத்தி மக்களை ஈர்கின்றனவே!

"விஞ்ஞானத்தின் வளர்ச்சியாக விளங்கும் தொலைக்காட்சியின் ஆதிக்கத்தைத் தடுக்க முடியாது.

இன்று நமது சமூகம், ஒரு மாறுதலுக்கு தயாராகிக் கொண்டிருக்கிறது. நமது கலாசாரத்தின் வேர்கள் பலமாக இருப்பதால் மேற்கத்திய கலாசாரத்தை நோக்கிய பயணம் தடுமாறியபடிதான் இருக்கும். அதன் இறுதி வடிவம் எப்படி இருக்கும் என்பதை இப்போது சொல்ல முடியாது. அந்த வகையில் சேனல்களின் தாக்கம் மிக அதிகமாகத்தான் இருக்கிறது. ஆனால் சின்னத்திரையை மட்டுமே பெரிய திரைக்குப் போட்டியாக நான் நினைக்கவில்லை. இன்று பல்வேறு காரணங்களுக்காக தியேட்டருக்கு வருவதை மக்கள் தவிர்க்கிறார்கள். போக்கு வரத்து நெருக்கடி, மட்டமான தியேட்டர்கள், திருட்டு விசிடி, போன்றவைகள் கூட காரணமாக இருக்கலாம். லாரியில் வரும் குடிதண்ணீரைப் பிடிப்பதற்காக சின்னத் திரை முன்னர் அமர்ந்து விடுபவர்களும் இருக்கிறார்கள். ஆனால் மக்களைக் கண்டிப்பாக தியேட்டர்களுக்கு இழுக்க முடியும். அமெரிக்காவில்கூட சம்பவத்துக்குப் பிறகு தியேட்டர்களுக்குப் படம் பார்க்க வருபவர்கள் எண்ணிக்கை கூடி இருக்கிறது."

தொலைக்காட்சி சேனல்களுக்கு இருக்கும் ஆதரவை குறைக்கும் விதமாக, 'நடிகர், நடிகைகள் பேட்டியளிக்கக் கூடாது; கிளிப்பிங்ஸ் தருவதில் ஒரு கட்டுப்பாடு' என்று முடிவெடுத்திருக்கிறார்களே?

"சினிமா, சின்னத்திரை, பத்திரிகைகள் என்ற இந்த மூன்று வெகு ஜன ஊடகங்களும் ஒன்றை ஒன்று தழுவி, தங்கள் வளர்ச்சியையும், நிலைப்பாட்டையும் உறுதி செய்து கொள்ள வேண்டிய நிலையில் இருக்கின்றன. இது என் தனிப்பட்ட கருத்து. ஒன்றை விட்டு ஒன்றோ, ஒன்றை அழித்து ஒன்றோ வாழும் நிலை நல்லதல்ல. தொலைக்காட்சி தயவு தேவையில்லையென்றால் 'பாராட்டிய சன் டீவிக்கு நன்றி' என்று விளம்பரப்படுத்தக் கூடாது. சேனல்காரர்களையும் கூப்பிட்டுப் பேசி ஒரு தீர்க்கமான முடிவு எடுக்கப்பட வேண்டும்."

'கோடீஸ்வரன்' நிறுத்தப்பட்டதற்கு காரணம், 'கோடீஸ்வரி'யின் போட்டி தானா?

"கட்சிசாயமில்லாத, அறிவுபூர்வமான நிகழ்ச்சி, 'கோடீஸ்வரன்! ஆனால் எம்.ஜி.ஆர் பிலிம் சிட்டியில் நாங்கள் குத்தகைக்கு எடுத்திருந்த அரங்கத்துக்குக் கால நீடிப்பு செய்ய மறுத்து விட்டார்கள். மக்களுடன் பல விஷயங்களைப் பற்றி கலந்து விவாதிக்க நல்ல வாய்ப்பாக இருந்தது அந்த நிகழ்ச்சி. எதிர்காலத்தில் சின்னத்திரையில் இது போன்ற நிகழ்ச்சிகள் நடத்தும் ஆர்வம் இருக்கிறது.

சந்திப்பு: ப்ரியன்
படங்கள்: ராஜன்

# வெட்ட




✉ 'உள்ளாட்சி நிர்வாகம் சரியாக நடக்குமா' என்ற கல்கியின் தலையங்கத்திற்குக் கட்டியம் கூறுவது போல இருந்தது, மதுரையில் துணை மேயர் தேர்தலின் போது ஏற்பட்ட கலாட்டா. இத்தகைய அட்டகாசங்களுக்கு இவ்வளவு செலவு தேவையா என்பது நியாயமான கேள்வியே.
சென்னை, சி.மகேஷ்

✉ விதவிதமான ஆடை வகைகள் பற்றிய கட்டுரைகள், வித்தியாசமான பேட்டிகள் கொண்ட 'ஆடைச் சிறப்பிதழ்' படிக்கப் படிக்க வெரி வெரி இன்'டிரஸ்'டிங்காக இருந்தது.
சென்னை, த.சத்தியநாராயணன்

✉ ப்ரணாவின் 'தொலைத்தவை...' கவிதை பிரமிக்க வைத்தது.
சென்னை, ஸ்ரீனிவாஸ்

✉ 'சாம்ராட் அசோகன்' விமரிசனத்தில் கலிங்கத்துப் பரணியைச் சம்பந்தப்படுத்தியிருக்கிறீர்கள். கலிங்கத்துப் பரணிக்கும் அசோகரின் கலிங்கப் போருக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னர் தமிழ் மன்னன் குலோத்துங்கன் கலிங்கத்தின் மீது படையெடுத்த காட்சிகளைத் தான் 'ஜெயங்கொண்டார்' எனும் கவிஞர் விவரித்துள்ளார்.
சென்னை, கே.ஏ.துரைசாமி

✉ தராசு பதில்கள் கச்சிதமாகவும் உண்மையாகவும் உள்ளன. கோலாகலமான ஜோக்ஸ் ஒவ்வொன்றும் தித்திக்கின்றது.
மருதஞ்சாவடி, கோ.பாக்கியராஜ்

✉ 'காதல் நெசவு' கதை படு இயல்பாக, எளிமையான நடையில் சொல்லப்பட்டிருந்தது. ஆடை சிறப்பிதழில் இக்கதை இடம் பெற்றிருந்தது செம பொருத்தம்.
சென்னை, என்.ப்ரியா

✉ அம்மா ஆசி பெற்ற அ.தி.மு.க. ஆட்சியில் அவனவன் அட்வான்ஸ் இல்லை; போனஸ் இல்லை என்று எரிச்சலோடு இருக்க, நீங்க

# எண்ணெய் ஊற்றிய புண்ணியம்!

வேறு ஆடைச் சிறப்பிதழ், ஆபரண சிறப்பிதழ் என்று எரிகிற வீட்டில் எண்ணெய் ஊற்றி புண்ணியம் தேடிக் கொள்கிறீர்கள்.
மணப்பாறை, ஆனந்தி ராஜா

✉ சுகிசிவம், ஓவியர் மாருதி, இராம வீரப்பன், அறுசுவை நடராஜன், நல்லிகுப்பசாமி என்று எல்லாம் 40 தாண்டிய பெருசுகளிடமே கேட்டிருக்கிறீர்கள். 'புடைவையில் யார் அழகு?' என்று இளம் வயது கல்லூரி மாணவர்களிடம் கேட்டிருக்க வேண்டாமோ?
ஈரோடு, ரஞ்சனிப்ரியன்

✉ ஆடை ஸ்பெஷலில் லட்ச ரூபாய் ஆடை உண்மையிலேயே ஸ்பெஷலுங்கோ.
ஒட்டன்சத்திரம், செ.ரா.ரவி



# தயாரிப்பாளராகிறார் மனீஷா!

மனீஷா கொய்ராலா, நேபாளத்தின் அழகு ஆர்க்கிட் மலர்! மும்பை இறக்குமதிகளில் நிறைய முகங்கள் ஞாபகத் துணுக்குகளாகத் தொலைந்து போயிருக்க இவர் மட்டும், 'பம்பாய்', 'இந்தியன்', 'முதல்வன்', 'உயிரே', 'ஆளவந்தான்' என்று வருடந்தோறும் 'தென் மேற்கு தென்றல்' வீசிக் கொண்டிருக்கிறார். தமிழ் ரசிகர்களின் 'மனதைக் கொய்த'ராலாவுடன் கொஞ்சம் பேசிக் கொண்டிருந்தபோது...

**நீங்கள் என்ன மாதிரியான பெண்?**

என் செல்லப் பெயர் மான்யா. ஆனால் என் பெயருக்கேற்ப நான் மென்மையானவள் அல்ல. இரும்புபோல் உறுதியானவள். எமோஷனல் டைப்பும்கூட. அதிக சுதந்தரம் விரும்புபவள். எடுக்கின்ற முடிவுகளில் தெளிவாகவே இருப்பேன். எனக்குச் சரியென்றால் சரிதான். அதை மாற்ற யாரையும் அனுமதிக்கமாட்டேன். எது நடந்தாலும் நல்லதுக்குத்தான் என்ற மனோபாவம் எனக்கு உண்டு.

**நிறையப் படங்களில் நடிப்பதில்லேயே! ஏன்?**

வருடத்துக்கு இரண்டு அல்லது மூன்று படங்கள், என தேர்ந்தெடுத்துச் செய்வதால் வாய்ப்புகளை அலசி, சிறந்த படங்களை மட்டுமே ஒப்புக் கொள்கிறேன்.

**ஒரு படத்தை எப்படி தேர்ந்தெடுக்கிறீர்கள்?**

கதையும், கதாபாத்திரமும் பிடித்திருந்தால் உடனே ஒப்புக் கொள்வேன். ஆனாலும் சில சமயங்களில் கதை சொல்லப்படும்போது நன்றாக இருக்கும். ஆனால் படமாகும்போது நாம் எதிர்பார்த்த விஷயங்கள் வந்திருக்காது. இது போன்ற அனுபவங்கள் எனக்கு நிறையவே உண்டு. நான் நடித்த சில படங்களைப் பார்க்கும்போது 'ஏன்டா ஒப்புக் கொண்டோம்' என நான் முழுக்க கவலைப்பட்டிருக்கிறேன். அதற்காக இப்போது வருந்திப் பயனில்லையே!

**ஆளவந்தானிலும் ஸ்கிரிப்ட் கேட்டுத்தான் ஒப்புக் கொண்டீர்களா?**

அதற்குத் தேவையே இல்லை. கமல்ஜி ஒரு படம் பண்ணுகிறார் என்றால் எத்தனை துல்லியமாக யோசித்து, முடிவு எடுத்து இறங்குவார்? அதில் நான் கேட்க, யோசிக்க என்ன இருக்கிறது? நடிக்கக் கேட்டவுடன் அடுத்த விநாடியிலேயே மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன். கமல்ஜியுடன் நடிக்க கொடுத்தல்லவா வைத்திருக்க வேண்டும்.

**நடிப்புக்குப் பிறகு கால் வைக்க எண்ணும் துறை எது?**

இயக்கம்! நான் ஒரு ஆர்ட் பிலிம் இயக்க முடிவு செய்திருக்கிறேன். ஆனால் அது இப்போதல்ல. என் தாத்தாவும் முன்னாள் நேபாள பிரதமருமான பி.பி. கொய்ராலாவின் வாழ்க்கை வரலாறை நேபாள காங்கிரஸ் கட்சி தயாரிக்கிறது. இந்தப் படத்தில் நான் பேத்தியாக நடிப்பதோடு தயாரிப்பு வேலைகளையும் கவனிக்கிறேன். இதில் யார் யார் நடிக்கிறார்கள் என்பது இன்னும் முடிவாக வில்லை.

- எஸ்.ஜென்னி



**பிற பத்திரிகைகளில் வெளியிடப்பட்ட சில வாசகர் கடிதங்கள் – சற்றே சுருக்கமாக.**



ப்ரேக்(யூகோஸ்லாவியா)போன்ற சிறிய நகரங்கள் கூட வருடத்துக்கு எழுபது மில்லியன் சுற்றுலா பயணிகளை இழுக்கிறது. ஆனால் மொத்த இந்தியாவுக்குமாக இரண்டு மில்லியன் சுற்றுலா பயணிகள் தான் வருடம்தோறும் வருகிறார்கள். இயற்கை அற்புதங்கள் நிரம்பியிருந்தாலும் உலகின் மொத்த சுற்றுலாப் பயணிகளில் 0.38 சதவீதம் பேர் மட்டுமே இந்தியாவுக்கு வருகிறார்கள்!

மகாவீரர், புத்தர், மகாத்மா காந்தி, சாமியார்கள், ஆழ்நிலை தியானம், தந்திரம் – இவ்வளவுக்கும் தாயகமாக உள்ள ஒரு நாட்டினால் அதிக அளவில் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்க முடியவில்லையென்றால் நமது சர்வதேச மார்க்கெட்டிங் உத்தியில் ஏதோ அடிப்படை தவறு இருக்கிறது.

தவிர, சுத்தமான குடிநீர், சுகாதாரமான உணவு, சுற்றுலாத் தலங்களுக்குச் சுலபமாகச் சென்றுவர ஏற்பாடுகள், பிச்சைக்காரர்கள் இல்லாத சூழல் இவற்றையெல்லாம் நம்மால் சுற்றுலா பயணிகளுக்கு ஏற்படுத்திக் கொடுக்க முடிந்தால் ஒழிய, அலங்காரமான வாசகங்களை மட்டும் நமது சுற்றுலாத் துறை உருவாக்குவதில் பயனில்லை.

(அலைவ் –
கே.பி. ரஞ்சன், மும்பை)

## மணமாகா கர்ப்பிணிகள்!

ஒரிஸாவில் உள்ள பத்மகேசரிபுரம் கிராமத்தில் இன்றளவும் நடந்து வருகிறது

## மாற்றான் தோட்டம்...

இந்தக் கொடுமை. மருமகளாக வரப் போகிறவள் தன் வீட்டுக்கு ஏற்றவள்தானா என்பதைப் பிள்ளை வீட்டார் சந்தேகமின்றி அறிந்துகொள்வதற்காக அந்தப் பெண், பிள்ளை வீட்டில் சில காலம் தங்க வேண்டும். அதற்குப் பிறகு அவளை மருமகளாக ஏற்பதோ ஏற்காததோ பிள்ளை வீட்டாரின் விருப்பத்தைப் பொறுத்தது! இந்தக் கால கட்டத்தில் இல்லற உறவு உட்பட எல்லா விதங்களிலும் அவள் அந்த வீட்டு மருமகளாகவே நடந்து கொள்ள வேண்டும்.

ஒன்றரை வருடங்கள் இப்படி இருந்துவிட்டு, கர்ப்பம் தரித்தப்பின் நிராகரிக்கப்பட்ட ஜமுனா என்ற பெண், காவல் நிலையத்தில் புகார் கொடுத்த பிறகுதான் இந்த வழக்கம் வெளிச்சத்துக்கு வந்திருக்கிறது. இப்படி அறுபதுக்கும் மேற்பட்ட மணமாகாத கர்ப்பிணிகள் அந்த கிராமத்தில் இருக்கிறார்கள்.

இந்தச் சூழலில் பெண்களுக்குச் சம உரிமை என்றெல்லாம் நகர்ப்புறங்களில் கோஷம் எழுப்புவது அர்த்தமில்லாததாகப்படுகிறது.

(உமன்ஸ் எரா – பர்வீன்மாலிக், சண்டிகர்)

செப்டெம்பர் பதினொன்று நிகழ்வுகள் நாகரிகங்களுக்கிடையே ஏற்பட்டப் போராட்டம் என்று கூறிவிட முடியாது. சவுதி அரேபியாவும் எகிப்தும் பயங்கர வாதத்தை ஆதரிக்கும் நாடுகள் என்று கூறுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை. சவுதி அரேபியாதான் ஒஸாமா பின்லேடனை வெளியேற்றியது. எகிப்து அதன் உள்நாட்டுத் தீவிரவாதிகளைச் சமாளிக்க நடவடிக்கை எடுத்து வருகிறது. மலேஷிய அரசு தீவிரவாதத்தை ஆதரிப்பதற்கான எந்த ஆதாரமும் கிடைக்கவில்லை. ஆக பாக்கியிருக்கும் நாடுகள் ஆப்கானிஸ்தானும் பாகிஸ்தானும்தான். சுற்றி வளைக்காமல் உண்மையைத் துணிவுடன் அணுகுவதே நல்லது.

(பிஸினஸ் வோர்ல்ட் – ராஜ் கடெஸல்வி, பெங்களூர்)

ஜனாதிபதியாக இன்னமும் முழுமையாகத் தயாராகவில்லை என்கிற வகையில் இப்போதைய அமெரிக்க அதிபர் புஷ்ஷை முந்தைய அதிபர் ட்ரூமேனோடு ஒப்பிடுவது சரியல்ல. புஷ் அடிப்படை மதிப்பெண்களை மட்டுமே பெற்று கல்வியை நிறுத்திக்கொண்டவர். அவருடைய ஒவ்வொரு பேச்சையும் எழுதித் தர டஜன் கணக்கில் ஆட்கள் இருக்கிறார்கள். ஆனால் ட்ரூமேன் சிறந்த கல்விமான். தொடக்க காலத்தில் அவரே சிறுவர்களுக்கு வகுப்புகள் எடுத்திருக்கிறார். ஷேக்ஸ்பியர், பெஞ்சமின் ப்ராங்க்ளின் ஆகிய பலரைப் பற்றி பல விஷயங்கள் அறிந்திருந்தவர். தெற்காசிய சரித்திரத்தைக் கரைத்துக் குடித்தவர்."

(தி எகனாமிஸ்ட் – டொராத்தி லாரன்ஸ், ஹங்கேரி)


• புஷ்

"நான் ஒரு அமெரிக்கப் பிரஜை. அமெரிக்க வெளியுறவுக் கொள்கை சரிவர இருந்ததில்லை என்றும் பல கொடுங்கோலர்களை அமெரிக்கா ஆதரித்து வந்திருக்கிறது என்றும் கூறுகிறார் அருந்ததிராய். இந்த விஷயத்தில் அமெரிக்கா தன்னை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை ஒத்துக் கொள்கிறேன். ஆனால் அமெரிக்காவையும் தலிபானையும் ஒன்றாக வைத்துப் பார்ப்பது பெரும் தவறு. ராய் எழுதிய நாவலின் தலைப்புக்காகவே தலிபான் ஆட்சி அதைத் தடை செய்திருக்கும். ஏன், அதை எழுதியதற்காக அவர் (அங்கிருந்திருந்தால்) தூக்கிலிடப்பட்டிருப்பார்.

தவிர ஹிரோஷிமா நாகாஸாகி குண்டு வெடிப்பை பேர்ல் துறைமுக குண்டுவெடிப்போடு சமமாக்குகிறார் அருந்ததிராய். ஆனால் சீனா, தென்கிழக்கு ஆசியா, பசிபிக் தீவுகள் போன்ற பல பகுதிகளைக்கூட ஜப்பான் ஆக்கிரமித்தது என்பதை மறக்கக் கூடாது. ஜப்பானை அமெரிக்கா வீழ்த்தியது இந்த நாடுகளுக்கும் நன்மையாகத்தான் முடிந்தது.

(அவுட்லுக் – ஆன் கிறிஸ்டென்ஸென் வாஷிங்டன்)

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்.

## பட்டாசுக் கொளுத்திச் சுட்டுக் கொண்ட அனுபவம் உண்டா?

**சார்லி:** மூணாங்கிளாஸ் படிக்கிறப்போ, நான் பட்டாசு பைத்தியமா இருந்தேன். ஜேம்ஸ் பாண்டு 007 மாதிரி துப்பாக்கியும், கையுமாகத்தான் ஸ்கூலுக்குப் போவேன். பொம்மைத் துப்பாக்கியை, விமானத்தில் கேபினில் வாங்கி வைச்சிட்டு இறங்கும்போது கொடுக்கற மாதிரி, எங்க க்ளாஸ் டீச்சர் அந்த வஸ்துவைப் பிடுங்கி வைச்சிப்பாங்க; பின்னே 'கேப்' வெடிக்க வைச்சு, எல்லாப் பசங்களுக்கும் காது குத்தினால் சும்மா விடுவாங்களா?

எங்க மாமா சிவகாசிக்காரர். எங்க குடும்பமே அப்போ, 'காசைக் கரியாக்



# தீபா... வலி!

காதே... சினிப் பட்டாசு வாங்கிக் கொளுத்து' என்கிற மாதிரி வெளுத்துக் கட்டுவாங்க. கொஞ்ச நாளில் எனக்குப் பட்டாசு மேலே இருந்த ஆசை போய் கம்பி மத்தாப்பு, சங்கு சக்கரம், புஸ் வாணம், பென்சில், சாட்டைனு பேராசையா மாறிடுச்சு.

அதற்கு இன்னொரு காரணம். பட்டாசு சப்தம் பிடிக்காதுங்கிறதைவிட, காயப்படுத்துகிற வாய்ப்பு குறையுமேங்கிறதும்தான். ஆனாலும் ஒரு தரம் அல்பத்தனமா வெடிக்காத வெடி மருந்துகளை ஒன்னு சேர்த்து, கரி மத்தாப்பு கொளுத்தி அது கன்னா பின்னான்னு வெடிச்சு, கையெல்



லாம் வெந்து, நொந்து நூலானதும் உண்டு.

**விசித்ரா:** அப்பா அரசாங்க உத்தி யோகஸ்தர். தீபாவளிக்குச் சிக்கனம் பார்க்க மாட்டார். கைநிறைய வெடி வகையறாக் களை வாங்கிட்டு வருவார். நாங்க அதுக்காக ரொம்ப ஆர்வமா காத்துக் கிட்டு இருப்போம்.

வீர சாகஸம் செய்யறதா நினைச்சு, சின்ன சின்ன காயங்கள் பட்டுக்கிட்டது உண்டு. ஒரு தரம் அப்பா விஷ்ணு சக்கரம் கொளுத்தறேன்னு சொல்லி, கையைச் சுட்டுக் கிட்டார். அந்தத் தீபாவளியே கவலையோடு போச்சு.

சின்ன வயசில் பட்டாசு மேலே பயங்கர ஈடுபாடு இருந்துச்சு. ஆனா அந்த அளவுக்கு வசதி இல்லை. நடிக்க வந்த பிறகு பணம் இருந்திச்சு. ஆனா வெடிமேல இருந்த க்ரேஸ் போயிடுச்சி.

இப்பல்லாம் தீபாவளிக்கு, முட்டுக்காடு போயி, அங்கே இருக்கிற மனநலம் குறைஞ்ச குழந்தைகளோட இல்லத்துல கொண் டாடறேன். இந்த வருஷம் என் தலை தீபா வளி. அம்மா இந்து, அப்பா கிறிஸ்டியன், என் கணவரோ முஸ்லிம். இந்தமுறையும் குடும்பத்தோட முட்டுக்காடு போய் தீபா வளி கொண்டாடலாம்னு இருக்கோம்.

**மதன்பாப்:** சின்ன வயசில நான் கிட்டத்தட்ட ஒரு சயின்டிஸ்ட். ஜூனியர் அப்துல்கலாம் லெவல்ல யோசிப்பேன். ஒரு தரம் தீபாவளி அப்ப, ராக்கெட்டை வாங்கிட்டு வந்து குச்சியை உருவிட்டு, திரி யைக் கிள்ளி, பட்டாசு மாதிரி வெடிக்குமானு டெஸ்ட் பண்ணிப் பார்த்துட்டு இருந்தேன்.

அந்தச் சமயம் பார்த்தா, எதிர் வீட்டு மாமா குளிச்ச தலையைத் துவட்டிக்கிட்டு, புதுசாக் கட்டிக் கிட்ட வேட்டியோட எதிர்ல வரணும்? டேக் ஆஃப் ஆன வெடி, ராக்கெட், அவரோட வேட்



''மாமா, எனக்கு செலவு செய்றது புடிக் காட்டி அதை நேரடியா சொல்றதுதானே... அதை விட்டுட்டு தீபாவளியைக் கண்டு புடிச்சவனைக் கட்டிப்போட்டு உதைக் கணும்னு ஏன் சொல்றீங்க...!''

— வந்தவாசி மீனாட்சி சீனுவாசன்



''உங்க முதலாளியும் தமிழக அரசும் ஒண்ணா... எப்படி?''

''தீபாவளி முன்பணம் கேட்டா கையை விரிக்கிறாரு!''

– தஞ்சை தாமு



''தலைவர் இஞ்சிமுரப்பாவைத் தின்னுக்கிட்டே இருக்காரே... ஏன்?''

''உள்ளாட்சித் தேர்தல் தோல்வியை ஜீரணிக்க முடியலையாம்!''

– தஞ்சை சுபா

டிக்குள்ள புகுந்து, எக்கச்சக்கமா 'ஹாப்பி தீபாவளி' சொல்லிடுச்சி. நான் அடுத்த செகண்ட் அம்பேல், அந்தர் தியானம்! விட்டாலாச்சாரியா வேதாளம் மறையற மாதிரி உடு ஜூட்!

ஆனா மாமா விடுவாரா? தலை விரி கோலமா 'பூம்புகார்' கண்ணகி மாதிரி வீட்டுக்குள்ளே புயலா நுழைஞ்சு சரவெடி மாதிரி வெடிச்சித் தள்ளிட்டார்.

அப்புறம் வீட்லே என் முதுகைச் சேதம் பண்ணினது தனி எபிஸோட்!

**பாண்டு:** அஞ்சு வருஷத்துக்கு முன்னே பாண்டுவான என் தலையில கூண்டு மாதிரி முடி இருக்கும். 'உன்னைக் கொடு என்னைத் தருவேன்' படத்துக்கு அப்புறம்தான் மிலிட்டரி கட் பண்ணிக்க வேண்டியதாப் போச்சு. அதாவது, 'உன்னை... ஸாரி, உன் முடியைக் கொடு... அப்பத்தான் சான்ஸ் தருவேன்'னு சொன்னதாலே புதுகெட்டப்புக்கு நான் மாற வேண்டியதாப் போச்சு.

என்னோட தீபாவளி அனுபவத்தை மு.வெ.மு - மு.வெ.பின்னு இரண்டு பகுதியா பிரிச்சுக்கலாம்.

நான் இப்போ முடிவெட்டறதுக்கு முன்னால நடந்த ஒரு தீபாவளி சம்பவத்தைச் சொல்றேன். அப்பல்லாம் அக்கம் பக்கத்து பொண்ணுங்க கண்ணு வைக்கிற மாதிரி, என் தலையில வழிய வழிய எண்ணெய் வைச்சி கலக்குவேன்.

அப்படி ஒரு தீபாவளி திருநாளில், கொஞ்சம் வெடி கொளுத்திட்டு குளியலுக்குப் போகலாம்னு முதலில் புஸ்வாணத்தில் ஆரம்பிச்சேன். நான்தான் சூரதீரனாச்சே?

புஸ்வாணத்துக்குத் தீ வைக்கிறது, பின் வாங்கறது, தீ வைக்கிறது, கங்கு பிடிச்சிக்கிச்சான்னு எட்டிப் பார்க்கறது, பின் வாங்கறதுன்னு இருந்ததில் புஸ் வாணத்தோட சேர்ந்து என் தலைமுடியும்... ஐயோ... பத்திக்கிச்சு... பத்திக்கிச்சு! மனைவி, குழந்தைகள் எல்லாம் ஒரே கதறல். (அந்தக் கதறலுக்கு முக்கிய காரணம் அவங்க வெடியில் பாதியை நான் வெடிச்சதாகூட இருக்கலாம்)

— ஷம்மி



# ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®



அறிமுகப்படுத்தும்

## கல்யாண சீர்பலகாரங்கள்

எல்லா சீர்பலகாரங்களையும் வகைக்கு ஒன்றாக வைத்து அதற்காகவே வடிவமைக்கப்பட்ட அழகிய சீர்பலகார பெட்டிகளில் வழங்குகிறோம்.

பரிசளிக்க, சீர்வரிசைக்கு புதுமையானவை.

**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் ®**

பாண்டி பஜார், சென்னை. போன் : 4312345
காந்தி நகர் முதல் மெயின் ரோடு, அடையார், சென்னை. போன் : 4413805
அண்ணாநகர், சென்னை. போன் : 6192345

DIMENSIONS



# கமல் பாராட்டிய

சினிமா தியேட்டர்களெல்லாம் கல்யாண மண்டபங்களாகவும் வணிகத் தளங்களாகவும் உருமாறிக் கொண்டிருக்கும் காலத்தில் சென்னையில் அபிராமி தியேட்டரை மேலும் நவீனமாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் அபிராமி ராமநாதன்.

செலவு என்ன தெரியுமா? பத்து கோடி! பிரம்மாண்டமான இந்தத் திட்டத்தின் பெயர் அபிராமி மெகா மால்!

"சினிமா தியேட்டரோட ஷாப்பிங் காம்ப்ளக்ஸ் சேர்ந்திருந்தா அதற்கு பேர் மால்! கோலாலம்பூரில் இருபது லட்சம் சதுர அடியில் 'சுங்கைவான் பிளாஸா மெகா மால்' இருக்கு. இதுதான் தென்னாசியாவின் மிகப் பிரம்மாண்டமான மால். அந்தக் கட்டடத்தில் சினிமா அரங்குகள் மட்டுமே பதினெட்டு உள்ளன. அந்த ஐடியாவில்தான் அபிராமி மெகா மால் ப்ராஜெக்ட்டும் உருவானது" என்றார் ராமநாதன்.

அபிராமி மெகா மாலில் என்னென்ன விசேஷங்கள்?

- அண்டர்கிரவுண்டில் வாகனங்களை நிறுத்த பார்க்கிங் வசதி.
- முதல் மாடியில் ஃபுட் கோர்ட். இருபதாயிரம் சதுர அடியில் மிகப் பெரிய உணவு வளாகம் அமைக்கப்படும். இதில் பதினெட்டு விதமான ஃபாஸ்ட் ஃபுட் ஸ்டால்கள் இயங்கும். உள்ளூர் இட்லியிலிருந்து இத்தாலியன்

பாஸ்தா வரை எல்லாவிதமான உணவும் கிடைக்கும்.

• பதினெட்டு ஃபாஸ்ட் ஃபுட் ஸ்டால்களுக்கு நடுவே, உள்ள மேடையில் நாடகம், நாட்டியம், மேஜிக் என்று 'லைவ்' நிகழ்ச்சிகள் நடைபெறும். நிகழ்ச்சிகளை ரசித்துக் கொண்டே சாப்பிடலாம்.

# மால்!



• ராமநாதன்

• இரண்டாவது மாடியில் துணிக்கடை. இங்கேயும் ஒரு ரெஸ்டாரண்ட்.

• மூன்றாவது மாடியில் வீட்டு உபயோக சாதனங்கள் விற்பனைக் கடை. இங்கே, குழந்தைகளைக் கவருவதற்காக பம்பர் கார் ரைடிங் ஏரியாவும் உண்டு. இது பகலில் மட்டும்தான். இரவு நேரத்தில், இந்த இடம் டிஸ்கோ ஹாலாக மாறிவிடும்.

• மொட்டை மாடியில் டிரைவ்-இன் தியேட்டர். உலகில் வேறு எங்கேயும் டாப் ரூஃப் டிரைவ்-இன் தியேட்டர் கிடையாது. அபிராமி தான் முதல்! தரை தளத்தில் உள்ள லிஃப்டில் உங்கள் காரை நிறுத்தியதும், மொட்டை மாடி டிரைவ்-இன் தியேட்டருக்குப் போய்விடலாம்.

• இந்த டாப் ரூஃப் டிரைவ்-இன் தியேட்டரில் மாலை, இரவு என இரண்டு காட்சிகள் மட்டுமே! பகலில் இந்த இடத்தில் கார் பார்க்கிங் மட்டுமே! ஒரே சமயத்தில் 40 கார்கள் நிற்க வசதி உண்டு.

• காம்ப்ளெக்ஸ் முழுவதும் குளிர்சாதன வசதி செய்யப்பட்டிருக்கும்.

• விடுமுறையே இல்லாமல் இயங்கும் இந்த மெகா மாலில், இரவு பதினொரு மணி வரை ஷாப்பிங் வசதி உண்டு.

• கட்டணம் ஏதும் உண்டா? அபிராமி மெகா மாலில் நுழைய வேண்டுமென்றால், உங்களிடம் சினிமா டிக்கெட்டோ ஐம்பது ரூபாய்க்கான நுழைவுக் கூப்பனோ இருக்க வேண்டும். இந்தக் கூப்பனைப் பயன்படுத்தி, உள்ளே எதையாவது வாங்கிக் கொள்ளலாம்.

'சும்மா வேடிக்கை பார்க்க' என உள்ளே நுழைந்து விடும் ஆசாமிகளைக் கட்டுப்படுத்த இந்தத் திட்டமாம்.

"என்னைப் பொருத்தவரைக்கும் சினிமா என்பது அழிக்க முடியாத ஊடகம். மேலை நாடுகளை விடவா நாம் விஞ்ஞானத்தில் முன்னேறிட்டோம்? அங்கெல்லாம் சாடிலைட் டி.வி., வி.சி.டி. என இருந்தும் தியேட்டர்கள் லாபகரமாக இயங்கிக் கொண்டிருக்கின்றனவே. அதற்குக் காரணம், காலத்துக்கேற்ப, தியேட்டர்களை அடிக்கடி நவீனப்படுத்துவதுதான். எங்க தியேட்டருக்கு இன்னமும் 73 சதவிகிதம் கூட்டம் வருகிறது. தொழில் என்றால் போட்டிகள் வரத்தான் செய்யும். சமாளிக்கத் தெரிந்தால்தான் ஸ்டெடியா இருக்க முடியும். அதனால்தான் டி.டி.எஸ், டால்பி சிஸ்டம், தொலைபேசியில் சினிமா டிக்கெட் பதிவு செய்வது, என பல புதுமைகளைச் செய்து சினிமா ரசிகர்களைத் தியேட்டருக்கு வரவழைக்கிறோம்" என்கிறார்.

இந்தத் திட்டம் பற்றி கமல்ஹாசனிடம் சொன்னபோது, "புதுமையின் மறு பெயர் அபிராமி. உங்களைப் பார்த்தாவது மத்தவங்க செய்யட்டுமே. ஜமாயுங்க" என்று பாராட்டினாராம்.

**மடிப்பாக்கம் வெங்கட்**

படம் : **யோகா**

# போற்றிப் பாராட்டி

டால்பி, டிஜிட்டல், கிராபிக்ஸ் என நவீன தொழில்நுட்பங்கள் ஜிங்குஜா செய்யும் திரைப்படங்களுக்கிடையே, பழைய திரைப்படங்களை, பாடல்களை, கலைஞர்களை ஆராதனை செய்பவர்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய ரசனைக்காகவே, சென்னையில் 'விண்டேஜ் ஹெரிடேஜ்' என்ற அமைப்பு செயல்படுகிறது. 1931 முதல் 1960 வரை வெளிவந்த படங்களை வீடியோ காட்சிகளாகத் திரையிடுவது, பழம் பெரும் கலைஞர்களைப் பாராட்டி விழா நடத்துவது, திரைக்கலைஞர்களின் நினைவு தொடர்பான நிகழ்ச்சிகள் அமைத்து கௌரவிப்பது என பல விஷயங்களைச் செய்து வருகிறார்கள்.



• 'பழைய தமிழ் திரைப்படங்களில் காதல் காட்சிகள்' என்ற தலைப்பில் காட்சிகளைத் தொகுத்தளிக்கிறார் திலகவதி ஐ.பி.எஸ்

இந்த அமைப்பை ஏற்படுத்திய சர்வேஸ்வரன், வங்கியிலிருந்து விருப்ப ஓய்வு பெற்றவர். இவருக்குத் துணையாகத் தோள் கொடுக்கும் சுந்தர், தனியார் நிறுவனம் ஒன்றில் அதிகாரியாக இருக்கிறார். பழைய படப் பாடல்களைப் பாடுவதில் பிரபலமாக இருக்குமிவர், 'ராக பிரவாகம்' இசைக்குழுவை நடத்துகிறார்.

“பழைய திரைப் படங்களை மிகவும் ரசித்துப் பார்ப்பேன். மெட்ராஸ் ஃபிலிம் சொசைட்டியிலும் உறுப்பினரா இருந்தேன். பழைய படங்கள் எந்தத் தியேட்டரில் ஓடினாலும் தேடிப் பிடித்துப் போய்ப் பார்ப்பேன். சில வருஷங்களுக்கு முன் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' நாளிதழில், திரைப்பட திறனாய்வாளர் ராண்டார் கை எழுதிய 'மெமரபிள் மூவீஸ்' என்ற கட்டுரையை அடிப்படையாக வைத்து, இதற்கென தனி அமைப்பு ஏற்படுத்த வேண்டும் என வற்புறுத்தி அந்த நாளிதழுக்குக் கடிதம் எழுதினேன். என் கருத்தை ஆதரித்து ஐம்பதுக்கும் மேற்பட்ட கடிதங்கள் வந்தபோது, என்னுடைய எண்ணம் நிறைவேறும் என சர்வ நிச்சயமாகத் தோன்றியது" என்கிறார் சர்வேஸ்வரன்.

“அப்போதுதான் சுந்தர் எனக்கு அறிமுகமானார். இருவருடைய ரசனைகளும், எண்ணங்களும் ஒத்துப் போகவே, 'விண்டேஜ் ஹெரிடேஜ்' அமைப்பை உருவாக்கினோம்" என்றார் சர்வேஸ்வரன்.

இந்த அமைப்புக்குத் திரைப்பட திறனாய்வு மற்றும் வரலாறு, தகவல்

தியாகபூமி



தொடர்பு போன்றவற்றில் நிபுணர்களாக இருக்கும் வி.ஏ.கே. ரங்காராவ், ராண்டர் கை, ஃபிலிம் நியூஸ் ஆனந்தன் போன்றவர்கள் கௌரவ ஆலோசகர்களாக இருக்கின்றனர்."

பூமி' படக்காட்சியின்போது, அவர் வருகை தந்தது மறக்க முடியாத அனுபவம் என்கிறார் சர்வேஸ்வரன்.



• 'தியாகபூமி' படத்தைக் காண வந்த பேபி சரோஜா

"இளம் வயதிலேயே, பழைய திரைப்படப்பாடல்களில் ஆர்வம் ஏற்பட்டு விட்டது. இலங்கை வானொலியில் பாடல்களைக் கேட்கும் போது, அந்தப் பாட்டு இடம் பெற்ற திரைப்படம், பாடியவர்கள் பெயர், இசையமைப்பாளர் போன்ற விவரங்களைக் குறிப்பெடுத்துக் கொள்வேன். பழைய படங்களை ரசித்துப் பார்ப்பேன். அதனால் தான், 'வின்டேஜ் ஹெரிடேஜ்' அமைக்கும் பணியில் ஈடுபாடுடன் உழைத்தேன்" என்கிறார் சுந்தர்.

'சிந்தாமணி', 'திருநீலகண்டர்', 'ஹரிதாஸ்', 'புது வாழ்வு', 'மீரா', 'சகுந்தலை', 'சாவித்ரி', 'மதன காமராஜன்', 'திரும்பிப் பார்', 'அசோக்குமார்' என ஏறக்குறைய நாற்பது திரைப்படங்களைத் திரையிட்டுள்ளனர். தியாகராஜ பாகவதர், ஜி. ராமனாதன், எம்.எல். வசந்தகுமாரி, பாபனாசம் சிவன் ஆகியோருக்கு நினைவு விழா கொண்டாடப்பட்டுள்ளது.

எஸ்.வி. வெங்கட்ராமன், கொத்தமங்கலம் சீனு ஆகிய கலைஞர்களுக்கும் பாராட்டு விழா நடத்தப்பட்டுள்ளது.

# பொன்னே!

'வின்டேஜ்' அமைப்புக்கு ஸ்பான்ஸராக விரும்புகின்றவர்கள் இரண்டாயிரம் ரூபாய் செலுத்த வேண்டும். உறுப்பினராக சேருபவர்கள் ஆண்டு சந்தாவாக இருநூற்று ஐம்பது ரூபாய் செலுத்தினால் போதும். நல்லி குப்புசாமி, மணி கிருஷ்ணசுவாமி போன்ற பலரும் பொருளுதவி செய்திருக்கிறார்கள்.

கோடம்பாக்கத்தில் உள்ள சர்வேஸ்வரனின் வீடு, மினி மியூஸியமாக உள்ளது. 78 ஆர்பிஎம் மில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட திரைப்பட இசைத்தட்டுகள் இருக்கின்றன. அது தவிர, வீடியோவில் பதிவு செய்யப்பட்ட பழைய திரைப் படங்களின் காஸெட்டுகளும் நூற்றுக்கணக்கில் உள்ளன.

அமெரிக்காவில் 'ஷெர்லி டெம்பிள்' என்ற குழந்தை நட்சத்திரம் மிகப் பிரபலம். தென்னிந்தியாவின் 'ஷெர்லி டெம்பிள்' என அழைக்கப்பட்டவர், 'தியாகபூமி'யில் நடித்த பேபி சரோஜா. தமது 68வது வயதில் 'தியாக



• 'சாவித்திரி' திரைப்படம் காண வந்த எம்.எஸ். சுப்புலட்சுமி - சதாசிவம்.

- கே. அனந்தபத்மநாபன்

**வா**சல் முகப்பில் விழுந்து கிடந்த வார சஞ்சிகைகளை எடுத்துக் கொண்டு உள்ளே வந்தேன்.

அப்படியே அவற்றை ஈஸிசேரின் முன் போடப்பட்டிருந்த டீபாயில் போட்டு விட்டு நாற்காலியில் சாய்ந்தேன்.

முன்பெல்லாம் அந்தப் பத்திரிகைகளை 'அட்டை டு அட்டை' படிப்பது என் வழக்கம். படித்து முடித்தவுடன் என் மனத்தில் பதிந்த சிறுகதைகளின் எழுத்தாளர்களைப் பாராட்டி எழுதி அனுப்புவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

இப்போது எல்லாம் அந்தப் புத்தகங்களைப் புரட்டிப் பார்ப்பதுடன் சரி. கொஞ்ச நேரம் படித்தால் இமைகள் கனக்கும்.

**ஒ**ரு காலத்தில் நானும் எழுதிக் கொண்டுதான் இருந்தேன். எனக்குச் சிறுகதைக்கான இலக்கணம் தெரியாது. மனத்தில் தோன்றியதைக் காகிதத்தில் வடித்து அனுப்புவேன்.

இப்போது நினைத்துப் பார்த்தால் சிரிப்பு வருகிறது. குளிப்பதற்காக இடுப்பில் துண்டைக் கட்டிக் கொண்டு குளியலறைக்குள் நுழைந்தாகி விட்டது. ஓர் ஐடியா! உடனே எழுத்தில் வடிக்காவிட்டால் அது கலைந்து விடும். வீட்டில் எல்லோரும் பரிகசிக்க, மேஜை அடியில் உட்கார்ந்து எழுதி முடித்து விட்டுத்தான் குளிக்கவே போனேன்.

என் ஜீவிதத்திற்கு ஒரு வேலை. சார் - பதிவாளர் அலுவலக எழுத்தர். இப்போது எல்லாம் பத்திரம் பதிவுசெய்ய வருபவர்கள் அலுவலகக் கோப்பில் சேர்ப்பதற்காக ஒரு



## அன்னம்

பதியோ, பிரதமரோ ஆகிவிடுகிறார்களா என்ன! அப்படியே அலமாரியின் அடித் தட்டில் போட்டு விடுவேன்.

பிரதி 'டைப்' செய்து கொடுத்து விடுகிறார்கள்.

அந்தக் காலத்தில் தோல் - பைண்டு செய்த கனமான ரிஜிஸ்தர்களில் அந்தப் பத்திரங்களை எத்தனை பக்கங்கள் ஆனாலும் கைப்பட எழுத வேண்டும். விரல்கள் விறைத்துப் போகும். நெட்டி முறித்து விட்டுத் திரும்ப எழுத வேண்டும்.

வீட்டுக்குத் திரும்பியும் எழுதுவது. ஒரேயடியாக பத்திரங்களின் வறட்டு வாசகங்களைத் தவிர்த்து என் கற்பனையில் தோன்றும் எழுத்துகள். என் படைப்புகளை அச்சில் பார்க்கும் போது ஒரு திருப்தி - பிறந்த குழந்தையைக் கைகளில் ஏந்திய மாதிரி.

எழுதி அனுப்பிய எல்லாக் கதைகளும் பிரசுரமாகும் எனச் சொல்ல முடியாது. பல திரும்பி வரும். பிறக்கும் பிள்ளைகள் எல்லாம் ஜனாதி

என்ன காரணமோ பத்திரிகை ஆசிரியர்களுக்கு என் எழுத்து பிடித்திருந்தது. நான்கில் இரண்டு பிரசுரம் ஆயிற்று.

என் கதைகள் பிரசுரமான போது என்னை விட அதிகமாக ஆனந்தப்பட்டவள் என் மனைவி. அந்தப் புத்தகங்களை மறுபடி மறுபடி எடுத்துப் படித்துப் பூரித்துப் போவாள்.

"நீங்கள் ரிடையரான பிறகு நிறைய எழுத வேண்டும். வாரா வாரம் உங்கள் கதை ஏதாவது பத்திரிகையில் பிரசுரமாக வேண்டும்" என ஆசைப்பட்டாள்.

ஆனால் நான் வேலையிலிருந்து ஓய்வு பெறுவதற்கு முன் அவள் போய்ச் சேர்ந்து விட்டாள்.

நான் ரிடையர் ஆனேன்.

ஆபீஸ் வேலைகளின் சுமை என்னை அழுத்திய போதும் கூட பரபரவென்று இயங்கிய விரல்கள் நகர மறுத்தன.

அதையும் மீறி நான் சிரமப்பட்டு எழுதி அனுப்பிய கதைகள் திரும்பி வந்தன.

ஒன்று இரண்டல்ல. வரிசையாக எல்லாமே.

முப்பது ஆண்டுகளுக்கு மேல் என் எழுத்து பிடித்திருந்த அத்தனை பத்திரிகைகளுக்கும் என் எழுத்து பிடிக்காமல் போன மர்மம் என்ன?

நான் மட்டும் ரிடையர் ஆகவில்லை. என் தலைமுறையே ரிடையராகி விட்டது. பத்திரிகை அலுவலகங்களின் ஆசிரியக் குழு மாறி விட்டது. புதிய கோணங்கள் - புதிய பரிமாணங்களில் வரையப்பட்ட கதைகள் அவர்களுக்குப் பிடித்திருந்தன. யதார்த்தத்திலிருந்து விலகி எதிர்பார்ப்புகள் - இலட்சியங்கள் பிரதிபலித்த எழுத்துக்களுக்கு வரவேற்பு இருந்தது.

அதற்காக நான் வருத்தப்படவில்லை. என் சந்ததி தலை எடுத்து விட்டது. எழுதுவதைப் படிப்படியாகக் குறைத்துக்

கொண்டேன்.

மூப்பு காரணமாக விரல்களில் வீக்கம். அறவே போக்க மருந்தே இல்லை என்றார்கள் வைத்தியர்கள். அது மட்டும் இல்லை. பத்து பைசாவுக்குப் பேப்பர் வாங்கி ஐந்து பைசாவுக்கு மை நிரப்பி ஐந்து பைசா செலவில் தபாலில் அனுப்பித்த காலம் போய் - இப்போது ஒரு கதையைப் பத்திரமாக அனுப்பி வைக்கப் பத்து ரூபாய் ஆகிறது.

பிள்ளைகள் - மருமகள்கள் முகம் சுளித்தார்கள்.

நான் ஒரு காலத்தில் கதைகள் எழுதிக் கொண்டிருந்தேன் என்றால் என் பேரக் குழந்தைகள் சிரித்தார்கள். ஏதோ பெரிய 'ஜோக்' என நினைத்துக் கைகொட்டிச் சிரிக்கிறார்கள்.

அலமாரியின் அடித்தட்டில் என் கதைகள் பிரசுரமான பத்திரிகைப் பிரதிகள். அதற்கு மேல் தட்டில் திருப்பி அனுப்பப் பட்ட கதைகள், கட்டுக் கட்டாக.

ஒருநாள் காலை 'வாக்கிங்' போய் விட்டுத் திரும்பிய போது, என் மருமகள் இரண்டு தட்டுகளையும் காலி செய்து பழைய காகித வியாபாரியிடம் போட்டுக் கொண்டிருந்தாள்.

"மக்கிப் போன கடுதாசி அம்மா! பொட்டலம் கட்டக் கூட உதவாது" என்றார் வியாபாரி.

"நீ காசே தர வேண்டாம். இடத்தை மலையாக அடைத்துக் கொண்டு இருக்கிறது. எடுத்துக் கொண்டு போ!" எனக் கும்பிட்டாள் என் மருமகள்.

அந்தக் கதைகளில் சிலவற்றைத் தொகுப்பாக வெளியிட்டிருக்கலாம். அரசாங்கப் பணியில் இருந்ததால் அப்போது செய்ய இயலவில்லை. இப்போது அவற்றைப் பிரசுரிக்க பதிப்பகங்கள் முன்வரவில்லை.

என் மருமகளைத் தடுக்க நினைத்தேன். என் நாட்கள் எண்ணப்பட்டு விட்டன. எப்படியும் ஒரு நாள் வீதிக்குப் போகப் போகிறதுதான். கொஞ்சம் முன்கூட்டியே. அவ்வளவுதானே! என்னை அடக்கிக் கொண்டேன்.

காலியான அலமாரியைப் பார்த்து என் விழிகள் கலங்கின.

"அப்பாடி! எத்தனை இடம்? எவ்வளவு சாமான்கள் வைக்கலாம்" என்று என் மருமகள் வியந்து கொண்டிருந்தாள்.

இரண்டு நாட்கள் சென்ற பின்னர், வாசலில் ஓர் ஆட்டோ வந்து நின்றது. என்னை யார் தேடி வருவார்கள்? என் பிள்ளையைப் பார்க்க வந்திருப்பார்கள். நான் அசட்டையாகத் திரும்பிக் கொண்டேன்.

"அப்பா! உங்களைப் பார்க்கத்தான் யாரோ வந்திருக்கிறார்கள்."

"என்னைப் பார்க்கவா!" எனக் கேட்டபடி எழுந்து வந்தேன்.

பரிச்சயமான முகமாகத் தெரியவில்லை.



"நான் தண்டையார்பேட்டையில் மளிகைக் கடை வைத்திருக்கிறேன். பழைய பேப்பர்காரனிடம் விலைக்கு வாங்கிய பத்திரிகைகளில் உங்கள் கதை இருக்கு ஸார். நிறைய கையெழுத்துப் பிரதிகள் வேறே. அந்தக் காலத்தில் எத்தனை தடவை படித்து ரசித்திருப்பேன். உங்கள் வீட்டில் தெரியாமல் விலைக்குப் போட்டிருப்பார்கள் போல இருக்கிறது. அதுதான் திரும்பி எடுத்து வந்தேன்."

வந்தவரை உட்காரச் சொன்னேன். எனக்கும் ஒரு ரசிகரா? மனத்தில் உற்சாக ஊற்று எழுந்தது.

"அடடா! இத்தனை சிரமப்பட்டு விட்டீர்களே. இடத்தை அடைத்துக் கொண்டு இருக்கிறதே என்று நான் தான் விலைக்குப் போட்டேன்" என்றேன்.

"அப்படியானால் இதெல்லாம் நிச்சயமாக உங்களுக்கு வேண்டாமா?"

"நிச்சயமாக வேண்டாம். அதுதான் சொன்னேனே! 'குப்பை' என நினைத்துத் தான் வெளியே போட்டோம்."

"அப்ப நானே வைத்துக் கொள்ளலாமா?"

"தாராளமாக."

அதற்குள் என் மருமகள் அவருக்குக் காப்பி எடுத்து வந்தாள். அவள் விலைக்குப் போட்டது தப்பு எனப்பட்டிருக்குமோ என்னவோ...

அதே சமயம் அவை மீண்டும் வீட்டில் அடைபடப் போவதில்லை என்பதில் ஒரு திருப்தியும் கூடப் பிறந்திருக்கலாம்.

அவர் புறப்பட்டுப் போனார்.

அவர்பால் ஒரு அனுதாபம் எழுந்தது.

பாவம். அவர் வீட்டிலும் ஒரு அலமாரி இருக்கும். அங்கேதான் இந்தக் 'குப்பை'கள் குடிபுகப் போகின்றன. ஒருநாள் - அவர் மகனோ - மருமகனோ வெளியில் தூக்கிப் போடப் போகிறார்கள்.

மெலிதாகச் சிரித்தேன்.

"எதற்குத் தாத்தா சிரிக்கறீங்க?" என்று கேட்டாள் என் பேத்தி, குழந்தை மாதிரி.

"தெரியலைடா கண்ணம்மா" என்றேன். ○

## அரசியலில் விஜயகாந்த்...

அரசியலுக்கு வருவார், வரமாட்டார், வந்தாலும் வரலாம் - என்ற விவாதங்கள் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, விஜயகாந்த் அரசியல் களத்தில் குதித்து விட்டார்.

கடந்த இரு வருடங்களுக்கு முன்பு தமது ரசிகர் மன்றங்



களுக்கென்று ஒரு கொடியை அறிமுகம் செய்து வைத்த விஜயகாந்த், "இது கட்சிக் கொடி அல்ல. நான் அரசியலுக்கு வரமாட்டேன்" என்றார்.

ஆனால் சமீபத்தில் நடந்த உள்ளாட்சித் தேர்தலில் விஜயகாந்தின் ரசிகர் மன்றத்தினர் 'விஜயகாந்தின் ஆசி பெற்ற வேட்பாளர்' என்று நின்று நானூறுக்கும் மேற்பட்ட இடங்களில் ஜெயித்து விட்டார்கள். பல இடங்களில் இரு திராவிட கட்சிகளை ஓரங்கட்டியிருக்கிறார்கள் விஜயகாந்த் ரசிகர்கள்.

இனி அதிகாரபூர்வமாக விஜயகாந்த் அரசியலில் இறங்குவார், விரைவில் தமது கட்சிக்குப் பெயர் வைப்பார் என்று தெரிகிறது.

- தமது பெற்றோர் பெயரில் (செங்கல்பட்டு அருகே மாமண்டூரில்) ஸ்ரீ ஆண்டாள் அழகர் பொறியியல் கல்லூரி கட்டியிருக்கும் விஜயகாந்த், அதே பெயரில் அரும்பாக்கத்தில் ஒரு கல்யாண மண்டபம் கட்டி வருகிறார். டிசம்பரில் 20 ஜோடிகளுக்கு இலவச கல்யாணம் செய்து வைத்து ஸ்ரீஆண்டாள் அழகர் கல்யாண மண்டபத்தைத் திறந்து வைக்கிறார்.

— சஜோ

# தே'சிங்கர்'ராஜா!

'இசை' என்பதே உயிரோட்டமான விஷயம்தான். அதை நம்ம கற்பனையால சுவாரசியப்படுத்தும்போது, ஒரு பூந்தோட்டமே மலர்ந்து மணம் வீசற மாதிரி, மனசெல்லாம் 'குப்'னு சந்தோஷமாயிடுது'' என்று துள்ளலுடன் பேசுகிறார் ஹரீஷ் ராகவேந்திரா.

'மின்னலே' படத்தில் இவர் பாடிய 'ஏ... அழகிய தீயே' மேடை தவறாமல் ஒலிக்கிற பாட்டு என்றால்



'டும்.... டும்... டும்' படத்தில் கலக்கிய 'தேசிங்கு ராஜா'வோ டாப்டென் அமர்க்களம்.

" 'பல்லடம் சகோதரர்கள்' எனப் பெயர் பெற்ற எனது பெரியப்பா வி.என். ராஜன், புல்லாங்குழல் இசைக் கலைஞர். என் அப்பா ராகவேந்திரன் கடம், மிருதங்க கலைஞர். அதனால் சின்ன வயசுலேயே இசை மீது இயற்கையான ஈடுபாடு வந்துடுச்சு'' என்று சொல்லும் ஹரீஷ், செங்கனூர் தங்காச்சான், அம்மாப்பேட்டை கிருஷ்ணமூர்த்தி ஆகியோரிடம் கர்நாடக இசை கற்றிருக்கிறார்.

திரைப்பட இசை பாட முதல் வாய்ப்பு வந்தபோது ஹரீஷுக்கு வயது பதினெட்டு. விவேகானந்தா கல்லூரியில் முதல் வருட மாணவர்.

"ஆமா... அதெல்லாம் ரொம்ப ஜாலியான நாட்கள். கல்சுரல் செக்ரட்டரியா இருந்ததாலே, எங்கேயாவது பாட்டு, மியூசிக் போட்டின்னா, உடனே மேடையேறிடுவேன். இன்டர்-காலேஜ் லெவல்ல கஜல், கர்நாடிக், சினிமான்னு பிரைஸா வாரி குவிச்சுடுவேன். போட்டியிலே நடுவரா வந்தவங்களும், இசையார்வம் மிக்க நண்பர்களும், "நீ சினிமாவிலே பாட ட்ரை பண்ணலாமே"ன்னு சொல்லிச் சொல்லியே ஊக்குவிச்சாங்க. 'முயற்சி பண்ணலாமே'ன்னு நானும் தொடர்பு கொண்டேன். என்ன ஆச்சரியம்! உடனேயே 'பஞ்சரம்' என்கிற தெலுங்கு படத்துல ராஜ் (கோட்டி) சார் இசையில் பாடும் வாய்ப்பு கிடைச்சது.

அப்புறம் வித்யாசாகர் இசையில் 'அரசியல்' வந்தது. ஆனா பெரிய பிரேக்கா, கிடைச்சது 'நிற்பதுவே.. நடப்பதுவே' பாரதியார் பாடல்தான். யார் அந்த புதுக்குரல்னு ஏக விசாரிப்பு! ஹாரிஸ் ஜெயராஜ் இசையில் நிறைய விளம்பர ஜிங்கிள்ஸ் பாடியிருக்கேன். அந்தத் தொடர்பால 'மின்னலே' படத்தில் வாய்ப்புக் கிடைத்தது. கூடவே அதிர்ஷ்ட தேவதையின் கடைக்கண் பார்வையும்'' என்று தமது இசைப் பயணத்தின் இனிய ஆரம்பத்தில் மூழ்கினார்.

இளையராஜாவின் ஹார்மோனியக் கையால் குட்டுப்பட்டவேளை, ஹரீஷ் ராகவேந்திரா தற்போது, கார்த்திக் ராஜா, யுவன்சங்கர் ராஜா, எஸ்.ஏ.ராஜ்குமார், பரணி, சௌந்தர்யன், இமாம், மணிஷர்மா, எஸ்.வி. கிருஷ்ணா ரெட்டி என பிரபல இசையமைப்பாளர்களின் இசையில் வெகு பிஸியாகப் பாடிக்கொண்டிருக்கிறார்.

"என் குரலில் தனி வசீகரம் உள்ளது என்பதை நானே உணர்ந்திருக்கிறேன். உச்சரிப்பும் சுத்தமாக இருப்பதாகப் பலரும் பாராட்டும்போது, மகிழ்ச்சியாக இருக்கு. என்னுடைய ரோல் மாடல் எஸ்.பி.பி. ஸார்தான். டி.எம்.எஸ்., பி.சுசீலாம்மா மாதிரி காலத்தை வென்ற பாடல்கள் பாடணும்னு ஆசை'' என்கிறார் ஹரீஷ்.

— கே. அனந்தபத்மநாபன்

## மேஷம்

உங்க புத்திசாலித்தனம், திறமை, துணிச்சல் எல்லாம் வெளிப்படப் போகுது. எந்தக் காரியத்துல இறங்கினாலும் திறமையோட ஈடுபட்டு வெற்றி காண்பீங்க. ஓட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்குக் கும்மாளம்தான். புது சொத்துக்கள் சேர வாய்ப்பிருக்கு. குடும்பத்துல இது வரை இருந்து வந்த சலசலப்பு குறையும். செலவுகள் எகிறும். பேச்சில் கடுமை வேண்டாம். இனிமையா பேசுங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும்.

## ரிஷபம்

கிரகங்கள் உங்களுக்குச் சாதகமா இருக்கறதால திட்டங்கள், எண்ணங்கள் நிறைவேறப் போகுது. கணிதம், ஓவியம், எழுத்து, சிற்பம் துறைகளைச் சேர்ந்தவங்க, வெற்றி நடை போடுவாங்க. மக்கள் நலம் சீரா இருக்கும். குடும்பத்துல 'மாங் கல்யம் தந்து னானேனா' சொல்ல வாய்ப்பிருக்கு. சொந்தமா தொழில் பண்றவங் களுக்கு லாபம் கொட்டும். பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படும். பண நட மாட்டத்துக்குப் பஞ்சமில்லை. கொடுக் கல், வாங்கல்ல கண்ணுல விளக்கெண் ணெய் ஊத்திக்கிட்டு இருக்கணும்.

## மிதுனம்

உங்க முகம் 'ஃபேர் அண்ட் லவ்லி' போடாமலேயே ஜொலிக்கப் போகுது. புதிய நகைகள், பொருட்கள் வாங்க வாய்ப்பிருக்கு. கலைத்துறையைச் சேர்ந்த வங்க வெற்றி நடை போடுவாங்க. பத் திரிகை, எழுத்து, கணிதத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டுக் குவியும். கணவன் மனைவி உறவு சீரா இருக்கும். அலைச்சல் அதிகரிக்கும். உடல் நலத்துல கவனம் வைக்கறது நல்லது. மின்சாரம், இயந்திரங்கள்ல வேலை பார்க்கறவங்க விழிப்போட இருக்கணும். பெரியவங்க ஆலோசனையையும் கொஞ்சம் கேளுங்க.

## கடகம்

பார்ட்டி, ஃபங்ஷன்னு இந்த வாரம் சுற்றப் போறீங்க. பணம் பலவழிகள்ல வரும். தொழில் பண்றவங்களுக்கு வளர்ச்சி. கலைத்துறையைச் சேர்ந்த வங்களுக்குப் புகழ் கூடும். நண்பர்கள், உறவினர்கள் உதவ வருவாங்க. உழைப்பு அதிகமா இருக்கும். எதிர்ப்புகள் குறையும். நீண்ட நாளாகத் தள்ளிப் போய்க் கிட்டிருந்த முக்கியமான திட்டங்கள் இப்ப நிறைவேறும். எல்லாவகை யிலும் வெற்றி வாய்ப்புகள் உங்களைப் போர் மேகம் மாதிரி சூழ்ந்திருக்கு. ஜமா யுங்க.

## சிம்மம்

துணிச்சலும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். மதிப்பு, செல்வாக்கு உயரும். அரசாங்கத்தால் அனுகூலம் ஏற்படும். பதவிகள், பட்டங்கள், விருதுகள் கிடைக்க வாய்ப்பிருக்கு. பண நடமாட்டம் தாராளமா இருக்கும். போட்டி பந்தயம், விளையாட்டுகளில் மத்தவங்க ஆச்சரியப் படும்படி சாதனை பண்ணுவீங்க. இதனால மதிப்பு, புகழ் ஏறும். குடும்பத் துல நல்ல காரியம் நடக்க வாய்ப்பிருக்கு. கொடுக்கல் வாங்கல்ல எச்சரிக்கை அவசியம். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும்.

## கன்னி

அமெரிக்காவுல 'புஷ்'ஷோட மதிப்பு ஏகத்துக்கும் எகிறியிருக்கற மாதிரி இந்த வாரம் உங்க புகழ், கௌரவம் உயரப் போகுது. நீங்களே அசந்து போகிற மாதிரி உங்க பேச்சில கவர்ச்சி இருக்கும். நண் பர்கள், உறவினர்களால் ஓரிரு காரியங்கள் நிறைவேறும். பத்திரிகை, ஓவியம், எழுத்து, கணிதத் துறைகளைச் சேர்ந்தவங்களுக் கெல்லாம் வெற்றி வாய்ப்பு அதிகரிக்கும். கொடுக்கல், வாங்கல்ல நல்ல பலன் இருக்கு. பெற்றோருக்கும் உங்களுக்கும் கருத்து வேறுபாடு வர வாய்ப்பிருக்கு. 'பொறுத்தார் பூமியாள்வார்'ங்கற கருத் தைக் கபக்குனு கடைபிடிச்சுக்குங்க.

# நடக்குமென்பார்; நடக்கும்!



## சங்கீத கலாநிதி டி.கே.கோவிந்தராவுக்கு (கன்னி) திடீர் அதிர்ஷ்டம் வருமாம்!

### துலாம்

நன்மையோ நன்மைதான் இந்த வாரம் உங்களுக்கு. அலைச்சல், அதிக உழைப்பு தவிர்க்க முடியாதது. இருந்தாலும் அதுக் கேற்ற மாதிரி பலன் உண்டு. தெய்வப் பணி, தர்ம பணிகளில் பங்கு கொள்ள சந்தர்ப்பம் வரும். சினிமா, சங்கீதம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு நோக்கம் நிறைவேறும். பெண்களுக்கு உற்சாக ஊற்று பொங்கும். பேச்சுல பதற் றம், கடுமை வேண்டாம். நிதானம் முக் கியம். உடல் நலன்லயும் கவனம் வையுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம்.

### மகரம்

செய்யும் தொழில் எதுவா இருந் தாலும் முன்னேற்றம் மலைபோல இருக்கு. பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு சிலருக்குக் கிடைக்கலாம். வேலை இல்லாமல் இருந்தவங்களுக்கு இப்ப அதுக்கான சந்தர்ப்பம் வரும். உங்க புத்திசாலித்தனம், திறமை வெளிப்படும்! முகத்துல கவர்ச்சி அதிகரிக்கும். புதியவங்க தொடர்பு பயன்படும். பயணத்தால் நல்ல காரியம் நடக்கும். வெளியூர்ல இருந்து நல்ல தகவல் வந்து சேரும். வீண் செலவு களைத் தவிர்க்கறது நல்லது. எல்லார்ட்ட யும் சுமுகமாப் பேசிப் பழகறது நல்லது.

### விருச்சிகம்

எடுத்த காரியத்தில் திறமையோடு, ஈடுபட்டு எப்பாடுபட்டாவது வெற்றி யடைவீங்க. கலைத்துறையைச் சேர்ந்த வங்களுக்குப் புகழ், பாராட்டு கூடும். உடல் நலம் சீராக இருக்கும். சுறுசுறுப் பாகச் செயல்படுவீங்க. துணிச்சலும் தன்னம்பிக்கையும் கூடும். எதிர்ப் பார்த்திருந்த பொருளாதார உதவி கிடைக்கும். குடும்பத்துல சுபகாரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. பேச்சிலும் செயலிலும் நிதானம் அவசியம். அக்கம் பக்கத்துல உள்ளவங்ககிட்ட அமைதியா பேசறது நல்லது.

### கும்பம்

குடும்பத்துல மகிழ்ச்சி, குதூகலம் பிறக்கும். பண நடமாட்டத்துக்குப் பஞ்ச மில்லை. கொடுக்கல், வாங்கல்ல நல்ல முன்னேற்றம் உண்டு. கணவனால் மனை விக்கும் மனைவியால் கணவனுக்கும் நன்மை உண்டாகும். கூட்டாகத் தொழில் புரிபவர்களுக்கு லாபம் குவியும். சினிமாத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடி வரும். பெண்கள் எண் ணம் ஈடேறப் பெறுவாங்க. வீண் அலைச் சல், விரயத்தைத் தடுக்க முடியாது. உடல் நலன்ல கவனம் வையுங்க. உடன்பிறந்த வங்களால செலவுகள் எகிறும். உஷார்.

### தனுசு

அரசியல்வாதிகளுக்குச் செல்வாக்கும் மதிப்பும் உயரப் போகுது. சினிமா, சங் கீதம், நாட்டியம், ஓவியம் போன்ற துறை களைச் சேர்ந்தவங்க, முன்னணிக்கு உயரு வாங்க. வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரும். நண்பர்கள், உறவினர்கள் உதவி புரிவாங்க. கொடுக்கல், வாங்கல் விவகாரங்கள்ல எச்சரிக்கையா இருங்க. கணவன் மனைவிக்குள்ள இருந்த மனக் கசப்பு நீங்கும். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். விருந்து உபசாரங் களில் பங்கு கொள்ள சந்தர்ப்பம் வரும். கோபத்தைக் குறைச்சுடுங்க.

### மீனம்

எடுத்த காரியத்துல வெற்றியடை வீங்க. துணிச்சலும் தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். ஆன்மிகப் பணிகளில் ஆர் வம் அதிகரிக்கும். அலைச்சல் அதிகரிக் கும். தொழில் பண்றவங்களுக்கு லாபம் கூடும். இயந்திரப் பணியாளர்கள், இன் ஜினியர்கள், ரியல் எஸ்டேட் துறை களைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். மனை, நிலம், வீடு இனங்கள் ஆதாயம் கொண்டு வரும். சின்னச் சின்ன இடர்பாடுகள் வந்து டென்ஷன் பண்ணும். இருந்தாலும் செவ் வாய் உச்ச நிலையில் உலவுவதால் எதையும் தாங்கும் சக்தி உண்டாகும்.

சரவணன் வழக்கமாக பாட்டியின் கூற்றுக்களுக்கு முக்கியத்துவமளிப் பதில்லை. காரணம் பாட்டி படிக்காத வள். அவளது காலம் வேறு. தற்போதுள்ள நவீன காலத்தில் பாட்டியின் அபிப்ராயங்கள் பொருத்த மற்றவை. 'பாட்டியே காலாவதி ஆன ஒரு பெண்தானே!' என்றெல்லாம் சரவணன் நினைத்துக் கொள்வான். ஆனாலும் பல சமயங்களில் பாட்டி சரவணனது எண்ணத்தைப் பொய்யாக்கி அவனைப் பிரமிக்க வைத்தும் இருக்கிறாள்.

சரவணன் மிகவும் குழம்பிக் கொண்டு இருக்கும்போது பாட்டி 'ப்பூ' என்று அவனது குழப்பத்தைத் தீர்ப்பதும், பாட்டியின் சில வைத்தியங்களும் சரவணனை சில சந்தர்ப்பங்களில் புருவமுயர்த்த வைத்திருக்கின்றன.

ஆனபோதிலும்கூட அவை எல்லாம் தற்செயலானவை.



16

பாட்டி ஒன்றும் பொருட்படுத்தத்தக்க பர்சனாலிட்டி(!) அல்ல என்றுதான் சரவணன் எண்ணிக் கொண்டிருக்கிறான்.

ஆனால் இந்த 'சாபம்' மேட்டரைப் பாட்டி குறிப்பிட்டதும் பாட்டி முக்கியமான எதையோ குறிப்பிடுகிறாள் என்று சரவணனுக்குத் தோன்றியது. பூவரச வீட்டை வாடகைக்கு விட்டதில் ஆரம்பம் முதலே அம்மாவுக்கும், பாட்டிக்கும் உடன்பாடில்லை.

பூவரசம் வீடு பற்றி ஏதோ ஒரு முக்கியமான சங்கதி இருக்கிறது. அது என்னவென்று பாட்டியிடம் கேட்டே ஆக வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான் சரவணன்.

இரவு. பாட்டி திண்ணையில் படுத்துக் கிடந்தாள். சரவணன் பெரும்பாலும் மாடியில் படுக்கிறவன். எப்போதாவது புழுக்கமான சமயங்களில் கயிற்றுக் கட்டிலைக் கொண்டுவந்து திண்ணையருகில் போட்டுப் படுப்பான். அன்று திட்டமிட்டே கட்டிலைக் கொண்டு வந்து திண்ணையருகே போட்டான். ஜமக்காளத்தைக் கட்டிலின் மீது விரித்தான்.

பாட்டி அரவம் கேட்டுத் திரும்பிப்



பார்த்தாள்.

''என்னடா... அதுக்குள்ள படுக்க வந்தாச்சு? இன்னிக்கு உன் கூட்டாளிக எவனும் சிக்கலையா! பன்னண்டு மணிக் குத்தானே வீட்டுக்கே வருவே நீ!''

"இல்ல பாட்டி. இன்னக்கி அவங்க மூணு பேரையும் நான் பாக்கலை."

"ஏன்டா?"என்றாள் கிழவி ஆச்சர்யமாக.

"மூணு பேரும் காலையிலே கிளம்பி சோறு கட்டிக்கிட்டு, தோப்புக்குப் போனாங்க."

"யாரு தோப்புக்கு?"

''கந்தரோட தோப்புக்கு... கௌம்பி வந்துக்கிட்டிருக்கப்ப எதித்தாப்பல நான் போனேன். உன்னயைத்தான்டா தேடி வர்றோம். கௌம்புன்னாங்க. எனக்கு கைகா லெல்லாம் ஒரே வலி. அதோட தோப்புக் கெல்லாம் யாரு போயி அலையிறது? அதான் போகலை."

சாதாரணமாக தனது நீண்ட கேள்வி களுக்கு எல்லாம் ஒற்றை வார்த்தையில் பதிலளிக்கிற அந்தப் பேரனா இவன் என்று தோன்றியது கிழவிக்கு. அந்த சந்தோஷத்தில் அடுத்த கேள்வியையும் கேட்டாள்.

"எதுக்குடா, 'மெத்'துல படுக்காம இங்க வந்து படுக்கற?"

"சும்மாதாம் பாட்டி... மாடில தனியாப் படுத்து படுத்து போரடிச்சுப்போச்சு.

## பாஸ்கர் சக்தி

அதான்."

''ம்... அப்படியாக்கும்!'' என்று அமர்ந்த கிழவி எழுந்து கால் நீட்டி வெற்றிலை மடிக்கத் துவங்கினாள்.

மணி என்ன இருக்கும் என்று யோசித்துப் பார்த்தான் சரவணன். பதினொன்று இருக்கலாம். கிழவி பெரும்பாலும் இரவில் எப்போது சரவணன் பார்த்தாலும் எழுவதும், வெற்றிலை போடுவதுமாகத்தான் இருப்பாள்.

''ஏன் பாட்டி, ராத்திரியெல்லாம் தூங்கவே மாட்டியா?''

''என்னடா ராத் தூக்கம். வயசான கட்டை. இராத்திரி

பகலுன்னு என்னா இருக்கு? பகல்ல அப்பப்ப தலையை சாய்ச்சிடறேன்ல. ராத்திரி சின்ன அரவம்னாலும் முழிப்பு வந்துருது" வெற்றிலையை மெல்ல ஆரம்பித்தாள் கிழவி.

சரவணன் சற்று அமைதியானான். இரவு மிகவும் ரம்மியமாக இருந்தது. வெறிச்சென்ற மேகமற்ற வானம். நிலவொளி. அமைதியான பொழுது. காற்று சில்லென்று இருந்தது. பாட்டியின் வெற்றிலை மெல்லும் சத்தமும்... சற்றுத்தள்ளி கூடைக்குள் கோழிகள் அவ்வப்போது எழுப்புகிற சப்தமும் தவிர நிசப்தமான பொழுது. மனசு அமைதியாக இருந்தது. இப்போது கேட்டால் பாட்டி விஷயங்களைத் தயங்காமல் சொல்வாள் என்று சரவணனுக்குத் தோன்றியது.



"போன தீபாவளிக்கு ஸ்கூட்டர் கேட்டிங்க..." "இந்த தீபாவளிக்கு என்ன கேட்கப் போறீங்க மாப்ளே?" "ஹி..ஹி..ஒரு செல்லுலர் போன்..."
– வி. விஜயலட்சுமி வெங்கடாசலம்

"பாட்டி."

"என்னடா."

"ஒரு விஷயம் கேப்பேன். மறைக்காம உண்மை சொல்லுவியா?"

"அடேயப்பா! என்னலாம் பேராண்டி இத்தாம் பெரிய இழுவை இழுக்கிறாரு? சொல்றா."

"நீ சமயத்துல நிறைய பொய் சொல்லுவ."

"நீ எப்ப எதைக்கேட்டு நான் பொய் சொன்னேன். ஏண்டா... நீ பாட்டுக்கு எதையாவது சொல்ல வேண்டியதுதானா... கேக்க வந்ததைக் கேள்றா..."

'ம்' சரவணன் தொண்டையைச் செருமிக் கொண்டான்.

"நம்ம பூவரச வீடு இருக்கில்ல பாட்டி."

"ம்...ஆமா..."

"அந்த வீட்ல என்ன பிரச்னை?"

பாட்டி வெற்றிலை மெல்வதை நிறுத்தினாள்.

"அதெல்லாம் ஒண்ணுமில்லையே!"

"பாட்டி...பாத்தியா... பொய் சொல்லாதே... அந்த வீட்ல ஏதோ பிரச்னை இருக்கு... அது என்னன்னு சொல்லு."

"நீ சின்னப்புள்ளை, எதையாவது யாராவது சொன்னாங்களா... அதெல்லாம் ஒண்ணுமில்லடா."

"சரவணன் கடுப்பானான்.

"ஏய்...பாட்டி, நீயே சொன்ன... நான் காதார கேட்டேன்."

"நான் சொன்னனா? ஐய்யய்ய..." என்றாள் கிழவி.

"ஆமா...அது சாபம் வாங்கின வீடுன்னு சொன்ன.... நீ மட்டும் சொல்லலை. அன்னிக்கு ஒரு குறிகாரன் வேற அந்த வீட்டைப் பாத்துட்டு இது சாபம் வாங்கின வீடுன்னு சொன்னான்."

கிழவி எதுவும் பேசாமல் மீண்டும் வெற்றிலையை மெல்ல ஆரம்பித்தாள்.

"சொல்லு பாட்டி... நான் இந்த வீட்டுக்கு ஒரே ஆம்பளைப் பையன். நம்ம வீட்ல ஒரு பிரச்னை இருக்குன்னா, அது எனக்குத் தெரிய வேணாமா?"

பாட்டி தலையை ஆட்டினாள்....

"அது நெசந்தாண்டா... ஆனா நீ சின்னப் புள்ளை. இப்ப எதுக்கு அதெல்லாம். கொஞ்ச நாள் பொறுத்து நீயே எல்லாத்தியும் தெரிஞ்சுக்கிருவ."

சரவணன் எரிச்சலாக, "இன்னும் நான் என்ன சின்னப் பய... காலேஜ் படிச்சு முடிச்சாச்சு... மீசையெல்லாம் வளர்ந்துருச்சு... இனி என்னா கெழவனாகணும்கிறியா? சொல்லு பாட்டி" என்றான் வற்புறுத்தலாக.

"ஏண்டா பேராண்டி வயசானவளைப் போட்டு துன்பப்படுத்துற?"

"இப்ப நீ சொல்லப் போறியா? இல்லையா?"

"சரி, சொல்றேன்... ஆனா உங்க அப்பன் இட்ட நீ மூச்சுக்காட்டக் கூடாது... ஏன் சொன்னேன்னு என்னைய வைவான்."

"சரி சொல்லலை... நீ சொல்லு.."

கிழவி ஒரு கணம் கண் மூடி அமைதியாக இருந்தாள். அவளது செய்கை ஏதோ தியானம் போலிருந்தது. பிறகு பலமாக ஒரு பெருமூச்சு விட்டாள்.

சரவணன் ஒருவிதக் குறுகுறுப்புடன் பாட்டியைப் பார்த்தவாறிருந்தான்.

பாட்டி சொல்ல ஆரம்பித்தாள்.

"எனக்குக் கல்யாணம் நடந்தப்போ என்ன வயசிருக்கும்ங்கற... ஒம்பதோ, எட்டோ எனக்கு வயசு... உங்க தாத்தனுக்குப் பதினெட்டு, இருவது வயசு இருக்கும்.

"அப்ப இந்த ஊர்ல என் மாமனார், உங்க தாத்தாவோட அப்பா, அவரு வச்சது தான் சட்டம். அவரு பேச்சுக்கு எதிர்ப் பேச்சு யாரும் பேச மாட்டாங்க....

"இந்த வட்டாரத்திலயே அவரு கிட்ட தான் வெள்ளைக் குதிரை இருந்துச்சு. மூணு குதிரைக... அதுல ஏறிதான் போவாரு, வரு வாரு....

"அப்பல்லாம் ஜமீந்தாருக்கிட்டத்தான் குதிரை இருக்கும். என் மாமனார் ஜமீன்தாரு இல்லை... ஆனா நில புலம், பணங்காசு, ஆள் கம்பு எல்லாம் இருந்தது. அதுனால அவ ரைப் பார்த்து எல்லாம் பயந்துக்கிட்டிருப் பாங்க.

"நாளெல்லாம் அவரு மூஞ்சியை நேராப் பார்த்ததே கிடையாது, ஒளிஞ்சு, ஒளிஞ்சு தான் பாத்திருக்கேன். திருக்கு மீசை வச்சுக்கிட்டு அய்யனாரு சாமி மாதிரி இருப்பாரு..."

இந்த இடத்தில் கிழவி நிறுத்திவிட்டு சரவணனிடம் சொன்னாள்.

"நான் சொல்ற கதை நடந்தப்ப நான் விவரமறியாதவ.. ஒண்ணு, ரெண்டு சங்கதி யைத் தவிர்த்து எல்லாமே மத்தவக சொல்லிக் கேட்டதுதான்... நீ படிச்ச பய... கெழவி என்ன என்னமோ உளர்றான்னு நினைக்கக் கூடாது."

சரவணன், "அப்படியெல்லாம் ஒண்ணும் நினைக்க மாட்டேன்.... நீ சொல்லு பாட்டி" என்றான்.

கிழவி மேற்கொண்டு சொல்லத் தொடங் கினாள்.

"அந்தக் காலத்தில இப்ப இருக்கற மாதிரி படிப்பு ஏது? வண்டி வாகனமெல்லாம் ஏது? இப்ப நீயெல்லாம் டவுனுக்குப் போற... புதுசு புதுசா ஆளுகளைப் பாக்குற... நாங்கல்லாம் பாத்த மூஞ்சியவேதான் பாத்துக்கிட்டிருப் போம். புதுசா ஆளுங்க ஒரு ஊருக்கு வர்றதே ரொம்ப ஆச்சர்யம். வாத்து மேய்க்கிறவங்க, கொடை போடுறவங்க வருசாவருசம் வந்து போவாங்க... சன்னி யாசிக, சாமியாருக வருவாங்க. ஒருதரம் அப்படி ஒரு சாமியாரு ஊருக்கு வந்தாரு.

"வந்தவரை தங்க வச்சுப் பணிவிடை பாத்தாங்க ஊரு சனங்க.

"நம்ம வீட்டுலருந்துதான் சாமியாருக்கு அரிசி பருப்பெல்லாம் போச்சு.

"ஒரு வாரம் உபசரிப்புல இருந்துட்டு கௌம்புன சாமியாரு என் மாமனாரைக் கூப்பிட்டாராம்.

'ஐயா... என்னை நல்லபடியாக் கவனிச் சுக்கிட்ட சந்தோஷம். உன் சாப்பாட்டை சாப்பிட்டுட்டுப் போறேன். ஒண்ணை நான் சொல்லாமப் போகக் கூடாது...' அப்படின்னாராம்.

என் மாமனாரு, 'என்ன சாமி? சொல் லுங்க!' அப்படின்னாராம்.

'உனக்குக் கெடுதல் வர்றதுக்கான கால நேரம் கூடி நிக்குது. மதியுள்ளவன் எப் பவுமே மாட்டிக்க மாட்டான். நீ மதியுள்



**"என்னங்க... உங்க அம்மா வெளி நாட்டையெல்லாம் சுற்றிப் பார்க்க ஆசைப்பட்டாங்களே!"**

**"ஆமா... அதுக்கு என்ன?"**

**"டிக்கட் எடுத்துக் குடுத்து காபூல்... காந்தகார் எல்லாம் போய்ட்டு வரச் சொல்லுங்க!"**

**– புளியறை கணேசன்**

ளவனா, சபலவானா?' அப்படின்னு சாமியார் கேட்க,

'சாமி பூடகமாச் சொல்லாதீங்க. உண் மையை உடைச்சுச் சொன்னாதானே எளியவனுக்கு விளங்கும்' அப்படின்னாராம் என் மாமனார்.

'இன்னும் கொஞ்ச நாள்ல பெண்ணும், பொன்னும் உன்னைத் தேடி வரும். அதை மறுத்தால் நீ பிழைத்திருப்பாய்...' அப் படின்னு சாமி சொல்ல, இவரு பதறி 'சாமி' அப்படின்னாராம்.

'மறுபடியும் சொல்றேன். தென்படும் பொன்னைத் திரும்பிப் பார்க்காதே. தேடி வரும் பெண்ணைத் தீண்டாதே' அப் படின்னு சொல்லிட்டுப் போயிட்டாரு.

"என் மாமனாரு இலேசாக பயந்தாரு. ஆனா சாமியாரு சொன்னபடி நடக்கலை. அதை மீறி நடந்தாரு."

(தொடரும்)



* அழகி

# நாவல் சினிமா

தங்கர்பச்சன் இயக்கத்தில் 'அழகி', பொன்வண்ணன் இயக்கத்தில் 'ஜமீலா', கௌதமன் இயக்கத்தில் 'சினிமாவுக்குப் போன சித்தாள்,' எடிட்டர் லெனின் இயக்கத்தில் 'ஊருக்கு நூறு பேர்', ஜானகி விஸ்வநாதன் இயக்கத்தில் 'குட்டி', இப்படி புகழ் பெற்ற நாவல்களைப் படமாக்கும் முயற்சி, தமிழ் சினிமாவில் இப்போது தான் சூடு பிடித்திருக்கிறது. கதைப் பஞ்சம் தலைவிரித்து கோரத்தாண்டவம் ஆடும் தமிழ் சினிமா உலகம் இத்தனை நாளாக ஏன் பார்முலா குண்டுச் சட்டியிலேயே குதிரை ஓட்ட வேண்டும்? நாவலுக்குத் திரைக்கதை அமைக்கும் திறமையும் தகுதியும் இங்கே இருப்பவர்களுக்கு இல்லையா?

ஹாலிவுட்டிலிருந்து வெளிவரும் அப்பட்டமான கமர்ஷியல் சினிமாகூட 'பேஸ்டு ஆன் எ பெஸ்ட் செல்லிங் நாவல்' என்று டைட்டில் சூட்டிக் கொள்ளும்போது, இங்கே நாவல்களைத் திரைப்படமாக்குவது ஏதோ தீண்டத்தகாத குற்றம் என்று நினைக்கிறார்களா? துணிச்சலாய்க் களம் இறங்கி, நாவல் சினிமாக்களை எடுத்துக் கொண்டிருக்கும் சில இயக்குனர்களிடம் வினவினோம். முதலில் வெடித்தவர் பொன்வண்ணன்.

“தமிழ் சினிமாவில் நாவலைப் படமாக எடுப்பது புதிதல்ல. இயக்குனர் பீம்சிங் மகரிஷியின் நாவல்களைப் படமாக்கியவர். தமிழ் சினிமாவுக்குப் புது ரத்தம் பாய்ச்சிய மகேந்திரன் நாவல்களைப் படமாக்கியவர். இவ்வளவு ஏன், தமிழின் முதல் சினிமாவான 'ராஜா - ஹரிச்சந்திரா' செவிவழி இலக்கியம் தானே. இங்கே சூப்பர்ஹிட் ஆன பல படங்கள் ஹாலிவுட் உள்ளிட்ட பல வெளிநாட்டுப் படங்களின் உல்டாவாக இருக்கின்றன. அதுபோன்ற படங்கள் அனைத்திற்கும் நாவல்தான் அடிப்படை என்பதை இங்கே வசதியாக மறந்துவிடுகிறார்கள்.

“இதுதவிர நாவலைத் திரைக்கதையாக்குவது பெரிய தலைவலி என்ற மூடநம்பிக்கை கோடம்பாக்கத்தில் இருக்கிறது. இந்த பயத்திற்கும் காரணம் இருக்கிறது. நாவல் என்ற ஒரு விஷயத்திற்கு எல்லைகள் கிடையாது. ஆனால் சினிமாவிலோ இரண்டரை மணி நேரத்தில் கதை சொல்ல வேண்டும்.



• சினிமாவுக்குப் போன சித்தாள்

கும் இயக்குனர் கௌதமன்,

"தமிழ் சினிமாவுக்கு வருகிற அல்லது இங்கே காலம் தள்ளுகிற இயக்குனர்களில் தொண்ணூற்று ஆறு சதவீதம் பேர் இலக்கியம் படிப்பதில்லை. சுய அறிவு இல்லாதவன்தான் இலக்கியம் படிப்பான் என்ற தாழ்வு மனப்பான்மை தமிழ் சினிமாவில்



• பொன்வண்ணன்



• தங்கர்பச்சான்



• கௌதமன்



• ஜமீலா

நாவலை வாசிக்கிறபோது, எந்த விஷயம் நம்மை ஊடுருவி பாதித்ததோ, அதே உணர்வு, படத்தைப் பார்க்கிறபோதும் ஏற்பட வேண்டும். ஆனால் இங்கே சினிமாவுக்கு என்று சில அம்சங்களை வலிந்து திணிக்க வேண்டியிருக்கிறது. இந்த திணிப்புகளை உள்ளடக்கிய திரைக் கதையில் நாவலின் இதயம் சிக்கலில்லாமல் துடிக்க முடியுமா என்பதுதான் கேள்வி. நிச்சயமாகத் துடிக்க வைக்க முடியும். உமாசந்திரனின் 'முள்ளும் மலரும்' நாவலைப் படித்திருக்கிறேன். அதன்பிறகு அது திரைப்படமாக வெளிவந்தபின் அதையும் பார்த்தேன். திரைக் கதையில் பல மாற்றங்கள் செய்து தமது அற்புதமான ஆளுமையை மகேந்திரன் வெளிப்படுத்தியிருந்தார். நாவல் படித்தபோது ஏற்பட்ட அதே உணர்வு படம் பார்த்தபோதும் இருந்தது." என்று சொல்லும் பொன்வண்ணன் கன்னட எழுத்தாளர் சாரா அபுபக்கர் எழுதிய 'சந்திரகிரி ஆற்றங் கரையில்' நாவலைத்தான் 'ஜமீலா'வாக எடுத்து வருகிறார்.

தமிழ் சினிமாச் சூழலில் நாவல்கள் அதிகம் படமாகாததற்கு இன்னும் பல காரமான காரணங்களை அடுக்குகிறார், ஜெயகாந்தனின் 'சினிமாவுக்குப் போன சித்தாள்' நாவலைப் படமாக்கியிருக்கும் இயக்குனர் கௌதமன்,

இருக்கிறது. சினிமாவில் இருக்கிற ஒருவன், கையில் நாவல் அல்லது ஓர் இலக்கியப் புத்தகத்தைக் கையில் வைத்திருந்தால்கூட அவனை ஏளனமாகப் பார்ப்பது ஒரு வியாதியாகவே இருக்கிறது. காரணம் அவர்களுக்குப் படிக்கும் பழக்கமே இல்லை. 'புத்தகத்தை எடுத்தால் தூக்கம் வருகிறது என்ன செய்ய?' என்று வெட்கமில்லாமல் சொல்கிறார்கள்.

'நான் உங்களது நாவலை சினிமாவாக எடுக்க அனுமதி வேண்டும்' என்று ஜெய காந்தனிடம் கேட்டபோது அவர் சொன்னது 'இதை நீ எடுத்தால், சினிமாவிலிருந்தே உன்னைத் துரத்தி விடுவார்களே' என்பதுதான். அந்த அளவுக்குச் சினிமாவில் இருப்பவர் இலக்கியம் படைக்க முடியாது, நல்ல இலக்கியத்தைச் சினிமாவுக்கு எடுத்தாளவும் முடியாது என்ற தவறான நம்பிக்கை இருக்கிறது." என்கிறார் கௌதமன்.

தமது 'வெள்ளை மாடு' சிறுகதை தொகுப்பை 'அழகி' படத்தின் திரைக்கதையாக மாற்றியிருக்கும் தங்கர்பச்சன் என்ன சொல்கிறார்?

"வளரும் இலக்கியத்தின் பங்களிப்பு இல்லாமல், எந்த நாட்டின் சினிமாவும் இயங்கவில்லை. தமிழ்ச் சூழலில் அந்த நிலை இனி தவிர்க்க முடியாதது. மலையாள சினிமா, பிரபல எழுத்தாளர்களின் நாவல்களைச் சுவீகரித்துக் கொண்டு, பாக்ஸ் ஆபீஸ் ஹிட்டுகளாக வெளிவருகின்றன. நாம் பேசிக் கொண்டிருக்கிற இந்த நேரத்தில் கூட எம்.டி. வாசுதேவன் நாயரின் 'தீர்த்ததாடனம்' நாவல் திரைப்படமாக்கப்பட்டு வருகிறது. கம்யூனிஸம் காப்பாற்றப்பட்டிருக்கும் அந்த மாநிலத்தில், அதன் தொடர்ச்சியாக கலையும், இலக்கியமும் காப்பற்றப்பட்டிருக்கிறது. தமிழ் சினிமாவில், நல்ல கதையை மதிக்கும், தயாரிப்பாளர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். விரைவில் தமிழ் சினிமா தன் சுயமுகத்தைக் கண்டெடுக்க, இலக்கியத்தைச் சரணடையும்" என்கிறார்.

ஆனால் நாவல்களைப் படமாக்கும் முயற்சிக்கு தயாரிப்பாளர்களின் ஆதரவு எப்படியிருக்கிறது என்று தோண்ட ஆரம்பித்தால் பதில் நம்பிக்கையூட்டுவதாக இல்லை. 'அழகி' படத்தை தயாரித்துவரும் உதயசங்கர் மட்டுமே சினிமா அதிபர். 'ஜமீலா' என்.எஃப்.டி.சிக்காகவும், ஏனைய படங்கள் பல்வேறு அறக்கட்டளை நிறுவனங்களுக்காகவும் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. வரவு செலவுக் கணக்குப் பார்க்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கும் சினிமா தொழிலில் இதுபோன்ற முயற்சிகளை அதிகரிக்கச் செய்வது வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் ரசிகர்களின் கைகளிலேயே இருக்கிறது.

- ஜெயந்தன்

# கல்கி - பி.எம்.சில்க்ஸ்

## இணைந்து வழங்கும் பட்டுப் புடைவை பரிசுப் போட்டி முடிவு - 13

கல்கி, வைரம் இந்த இரண்டு வார்த்தையும் இடம் பெறுமாறு சிறந்த ஸ்லோகன் எழுதி முதல் பரிசாக ரூ.2500/- மதிப்புள்ள பட்டுப் புடைவை பரிசாகப் பெறுகிறார்.

**மலை அரசன்,**
91, அருகந்தம்பூண்டி,
தோட்டப்பாளையம்,
வேலூர் - 632 004.

பரிசு பெறும் ஸ்லோகன்:

**ஆறு ரூபாய்க்குக் கிடைக்கும் அதிசய வைரம் கல்கி!**

ஆறுதல் பரிசாக கல்கி புத்தகங்கள் பெறும் ஸ்லோகன்கள்!

★ கற்க கல்கி துணையுடன்
நிற்க வைர(ம்) நெஞ்சுடன்
- சு. நமசிவாயம், 25, காந்தி நகர், முசிறி, திருச்சி - 621 211

★ கல்கி படிக்கும் வீட்டில் வரனை எடு
வைரம் கேட்கும் வீட்டின் வரனை விடு
- கௌசல்யா ஸ்ரீராமன், ஸ்ரீ கலாசாகர் அபார்ட்மெண்ட், விஜய்புரி, தார்னகா, செகந்திராபாத் - 500 017

★ வைரத்துக்கு அழகு வெண்ணொளி
கல்கிக்கு அழகு உள்ளொளி
- இ.கஸ்தூரி, விநாயகர் காலனி, அகஸ்தியர்பட்டி, நெல்லை - 627 416

# “முதுகில் குத்தியதை மறக்க முடியுமா?”



சுகுமாரன் நம்பியார்

பாரதிய ஜனதா கட்சியின் பொருளாளராக நியமிக்கப்பட்டிருக்கிறார் சுகுமாரன் நம்பியார். இப்போது, பா.ஜ.க.வில் தலைவர், பொருளாளர் இருவரும் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள். இந்த வகையில் தமிழகத்துக்கு பா.ஜ.க. கொடுத்திருக்கும் 'கௌரவம்' மற்ற கட்சிக்காரர்களை வியக்க வைத்திருக்கிறது.

“சமீபத்தில் அமிர்தசரஸில் எங்கள் கட்சி மாநாடு நடந்தது. அப்போது பிரதமர் அவர்கள் என்னிடம், “நிதியெல்லாம் தமிழ்நாட்டிற்குப் போய் விட்டது; இனி நான் அங்கேதான் வர வேண்டும்' என்று தமாஷாகச் சொன்னார். பொருளாளர் பதவி என்பதை விட, உயர்மட்டக் கூட்டங்களில் எனது கருத்தையும் சொல்லும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்பதுதான் சிறப்பான விஷயம்” என்கிறார் சுகுமாரன்.

**'நீங்கள் ஜெயலலிதாவின் நண்பர் என்றும், பா.ஜ.க.வுடன் ஜெ. நெருங்கி வருவதற்கான ஏற்பாடுகளை நீங்கள் செய்வீர்கள்' என்றும் சொல்லப்படுகிறதே?**

“மிகவும் தவறான கருத்து. ஜெயலலிதாவுடன் ஒரே பாட்சில் படித்தேன் என்பதாலும், என் தந்தை பிரபல நடிகராக இருப்பதாலும், நீண்ட காலமாக அவரைத் தெரியும் என்பது உண்மைதான். அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டணியில் இருந்தபோது, அவரை சில முறை சந்திக்க வேண்டியிருந்தது. கூட்டணி மாறியவுடன் எந்தத் தொடர்பும் கிடையாது.”

**தி.மு.க.–அ.இ.அ.தி.மு.க. எந்தக் கழகத்துடன் உங்கள் கூட்டு இயல்பாக அமைகிறது?**

“கரசேவாவை ஆதரித்த ஜெயலலிதா, சங்கப் பரிவாரிடம் கொஞ்சம் நெருங்கி வந்தார். அதே சமயம் இப்போது வாக்கு வங்கியை வளைத்துப் போடும் நோக்கில் 'மதச்சார்பற்ற அலை' என்று அரசியல் செய்கிறார். அரசியல் நோக்கில் பார்க்கும் போது பா.ஜ.க.வை எப்படி முதுகில் குத்தினார் என்பதை அவ்வளவு விரைவில் மறக்க முடியுமா? அந்த வகையில் தி.மு.க.வுடன் எங்கள் தோழமை நன்றாகவே இருக்கிறது. ஒரு நல்ல வொர்க்கிங் அலையன்ஸ் தி.மு.க.வுடன் தான் இருக்கிறது என்பதை உறுதியாகச் சொல்ல முடியும்!”

**சமீபத்திய உள்ளாட்சித் தேர்தல் தொடர்பாக தி.மு.க. – பா.ஜ.க. உறவில் நெருடல்கள் இருக்கின்றனவே!**

“சென்ற உள்ளாட்சித் தேர்தலை ஒப்பிடும் போது, தி.மு.க. கூட்டணியில் பா.ஜ.க. நான்கு மடங்கு அதிக இடங்களில் வெற்றி பெற்றிருக்கிறது. சில இடங்களில் இரு கட்சித் தொண்டர்களும் இணக்கமாகப் பணியாற்றி வெற்றிக் கனியைப் பறித்திருக்கிறார்கள். சில இடங்களில் லோக்கல் பிரச்னை காரணமாக, போட்டி வேட்பாளர்கள் களத்தில் குதித்து விட்டார்கள். ஆனால் இரண்டு கட்சித் தலைவர்களும், மிகத் தெளிவாக இருப்பதால் கூட்டணி தொடர்வதில் எந்தச் சிக்கலும் இல்லை.

**தமது கைது மற்றும் பேரணியில் தாக்குதல் தொடர்பான, கோரிக்கைகளை மத்திய அரசு புறக்கணித்ததால் கலைஞர், பா.ஜ.க. மீது கோபமாக இருக்கிறார் போலிருக்கிறதே?**

“உணர்ச்சிக் குவியலாக இந்த விஷயங்களை அணுகாமல் மத்திய அரசின் அதிகாரம், மற்றும் சட்டத்தின் அடிப்படையில் பார்த்தால் மத்திய அரசு தன்னால் முடிந்த எல்லா நடவடிக்கையும் எடுத்திருக்கிறது என்று சொல்லலாம்.”

சந்திப்பு : **ப்ரியன்**

# 1

தெய்வங்களுக்கு மொழி உண்டா? உலகின் அத்தனை மொழிகளும் பரம்பொருளின் சுவரூபம்தானே. தமிழ்நாட்டிலுள்ள எல்லா கோயில்களிலும் உள்ள எல்லா தெய்வங்களும் தமிழ்க் கடவுள் தானே! அத்தனை பேரும் தமிழால் துதிக்கப்பட்டு நம் மொழியிலும் பண் பாட்டிலும் உறைபவர்கள்தானே? பிறகேன் முருகனை மட்டும் தமிழ்க் கடவுள் என்று அழைக்கிறோம்...?

மரபுதான் காரணம். தமிழ்நாட்டில் 'கோயில்' என்றாலே சிதம்பரத்தைத் தான் குறிக்கும். 'பெரிய பெருமாள்' என்று சொன்னாலே ரங்கநாதரைத் தான் குறிக்கும். அனைத்து துதிப்பாடல்களும் இறைவன் புகழ் பாடினாலும் 'திருப்புகழ்' என்பது அருணகிரிநாதர் பாடல்களையே குறிக்கும்.



அதேபோல்தான், 'தமிழ்க் கடவுள்' என்று சொன்னால், அது முருகனையே நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும்!

இந்தத் தமிழ்க் கடவுள், தமிழ்நாட்டில் மட்டுமின்றி உலகெங்கும் பல இடங்களில் கோயில் கொண்டிருக்கிறான். 'உலகெங்கும் மேவிய தேவாலயந் தொழும் பெருமாளே' என்று அருணகிரிநாதர் அன்றைக்கே பாடி வைத்துவிட்டார்.

தமிழகத்துத் திருத்தலங்களில் உறையும் தமிழ்க் கடவுளான முருகனால் ஆட்கொள்ளப் பட்டு, அநுபூதி பெற்ற ஞானிகள், தங்கள் ஆன்மிக அனுபவங்களையும் முருகனுடைய தத்துவங்களையும் தமிழில் தொடுத்து நிரந்தரப்படுத்தி வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். இந்தப் பாடல்கள் மூலம் வாரம் ஒரு தலத்தை தரிசித்து, தமிழ்க் கடவுளைப் பற்றி மேலும் தெரிந்து கொண்டு அவன் அழகையும் மேன்மையையும் அனுபவிப்போம்.

அறுபடை வீடுகளுள் முதலிடம் பெறுவது திருப்பரங்குன்றம். இரண்டாவதாக வருவது திருச்செந்தூர். ஆனால் நமது 'தமிழ் யாத்திரை' திருச்செந்தூரில்தான் தொடங்குகிறது.

'ஒரு கோடி முத்தம் தெள்ளிக் கொழிக்கும் கடல் செந்தில்' நகரை முதல் படை வீடாகவும் கூறுவர்.



# தலம் தோறும் தமிழ்க் கடவுள்






'நீர் முத்துக்கள் ஓயாது தெளித்த வண்ணம் இருக்கும் நகர் என்னும்போது அலைகள் ஆர்ப்பாட்டம் செய்கிற காட்சி கண்முன் தோன்றும். சீராக அலைகள் வந்து கரைமோதுவதால் சீரலைவாய் என்றும் இதற்குப் பெயர். வீரவாகு பட்டினம் இன்னொரு பெயர். சூரபத்மனை முருகன் வென்ற இடமாதலால் 'ஜெயந்திபுரம்.'

தென்னாட்டு முருகன் கோவில்களில் மிகப் பெரியது செந்திலம் பதி. ஒன்பது நிலைகள் கொண்ட கோபுரம் ஊர் எல்லையிலிருந்தே நம்மை 'வருக வருக' என்று வரவேற்கிறது. ஒன்பது நிலைகளையும் குறிக்கும் ஒன்பது செப்புக் கலசங்கள் கோபுரத்தின் உச்சியில்.

ஏற்கெனவே இக்கோயிலைத் தரிசித்தவர்களுக்கு இந்த கோபுரங்களையும் கலசங்களையும் கண்டதுமே சிவகுமரனாக அந்த செந்தில் ஆண்டவன் நிற்கின்ற தோற்றம் மனக்கண்ணுக்குள் தோன்றிவிடும். விபூதி அபிஷேகம் முடிந்து, அந்த விபூதியாலேயே அவனை அலங்கரித்துத் திரை திறக்கிறபோது தெரிகிற அழகைக் காண, 'நாலாயிரம் கண் படைத்திலனே நான்முகனே' என்று பாடத் தோன்றும். புன் சிரிப்பு விகசிக்கும் ஒரு திருமுகமும்








குருஜி ஏ.எஸ். ராகவன்

நான்கு தளிர்க்கரங்களுமாக நிற்கிறான். வலப் புறம் சக்திவேல் ஏந்திய கை; வரமளிக்கும் வரத முத்திரை பிடித்த மறு கையில் தாமரை மலர். இடது கரங்களில் ஒன்று ஜபமாலை ஏந்தியிருக்கிறது. மற்றது ஒயிலாக இடுப்பில் பொருந்தியிருக்கிறது.

சிவனை நோக்கித் தவமிருக்கும் கோலம் என்பதால் கையில் வேல் இல்லை. ஆனால் சில நாட்களில் செந்தூரானுக்கு வேல் சார்த்துவது உண்டு. காலடியில் தங்கச்சிவலி யும் வெள்ளிச் சிவலியும் உள்ளன. குலி சப்படையும் இருக்கிறது.

இந்த முருகனின் பாதத்திலிருந்து பெறும் பத்ர விபூதி பிரசாதம் விசேஷம் வாய்ந்தது. பன்னிரண்டு நரம்புகள் ஓடும் பன்னீர் இலை யில் வைத்துக் கட்டித் தருவார்கள். சகல நோய்களையும், தீர்க்க வல்லது. இந்த இலை விபூதியை உட்கொண்ட விஸ்வாமித்திரரின் குன்மவியாதி குணமடைந்த விவரம் புரா ணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் விசேஷத்தைச் சிலாகித்து ஆதி சங்கரர் சுப்ரமண்ய புஜங்கத்தில் போற்றியிருக்கிறார்:

*அபஸ்மார குஷ்ட க்ஷயாஞ்ச்ச பர்மேஹ*
*ஜ்வரோத்மாத குன்மாத ரோகா மஹாந்தக*
*பிசாசாஸ்ச சர்வே பவத் பத்ர பூதிம்*
*விலோயே க்ஷணாத் தாரகா ரே த்ருவந்தே*

(தாரகாசுரனை வென்ற குமாரப் பெரு மானே, உன் இலை விபூதியின் மகிமையை நான் எவ்வாறு உரைப்பேன். வலிப்பு, குஷ்டம், க்ஷயம், நீரிழிவு, ஜுரம், குன்மம் முதலிய கொடுமையான துன்பங்களும் அந்த இலை விபூதியைக் கண்டமாத்திரத்திலேயே விலகியோடி விடுமே! என்பது அர்த்தம்)

சிவபூஜை செய்து, முகத்தில் குறுஞ் சிரிப்புத் தவழ பத்ர விபூதி பிரசாதம் வழங்குகிற இந்த பாலசுப்ரமண்யன்தான் இதே தலத்தில் ஒரு மாபெரும் சேனை திரட்டி யுத்தமும் செய்திருக்கிறான்.

சூரபத்மனை அழிப்பதற்காக புறப்பட்ட முருகனை தாரகாசுரன் வழிமறித்து வம்பு பண்ணியதும்; அவனையும் அவனுக்குத் துணையாய் நின்ற கிரௌஞ்ச மலையையும் அழித்துவிட்டு, முருகன் தன் படையோடு தேவசேனாதிபதியாக திருச்செந்தூர் வந்து தங்கியதாக புராணங்கள் கூறுகின்றன. இங்கிருந்தபடிதான் வீரவாகுவை சூரபத்மனி டம் தூதனுப்பினான் முருகன். அவன் கையால் சூரபத்மனுக்கு மரணம் என்று ஆனபின், வீரபாகுவின் தூது எங்கே பலிக் கும்! கடல் நடுவே மரமாக நின்ற சூரபத் மனை இருகூறாகப் பிளந்து அவனது அகங் கார மமகாரங்களை மயிலாகவும் சேவலாக வும் ஏற்றுக் கொண்டான் முருகன்.

திருச்செந்தூரில் அவன் தங்கியிருந்தபோது கடற்கரையில் விச்வகர்மா ஓர் ஆலயம் கட்டு வித்ததாகவும் புராணம் சொல்கிறது.

இன்னும் திருச்செந்தூரில் அதே ஆலயம் தான் இருக்கிறதா? என்ற ஆராய்ச்சியில் இறங்காமல், இப்போதைய ஆலயத்தைப் பார்ப்போம்.

தென்னாட்டு முருகன் கோயில்களிலேயே மிகப் பெரியதான செந்திலம்பதி, கடலை அடுத்த சந்தனமலையில் உருவாக்கப்பட்டது. கந்தமாதன பர்வதம் என்றும் இதைச் சொல்வார்கள்.

சந்நிதித்தெரு வழியே வருகையில் தூண்டுகை விநாயகரைத் தொழுதுவிட்டுத் தான் மணல் மேட்டில் ஏறி முருகன் ஆலயத்தை அடைய வேண்டும். அங்கிருந்து சுமார் இருநூறு மீட்டர் தூரத்தில் 'ஷண்முக விலாசம்' இருக்கிறது. யாத்ரிகர்கள் விரத- நோன்புக் காலங்களில் தங்கும் இடம்.

மூன்று பிராகாரங்கள் கொண்ட கோயி லைச் சுற்றி வருபவர்கள் வள்ளியம்மன் குகை யும் வதனாரம்ப தீர்த்தமும் எங்கே என்று விசாரித்தறிந்து பார்த்து வர வேண்டும். இந்தக் கோயில் வளாகத்திலுள்ள நாழிக் கிணறு, செந்திலான் தன் படை வீரர்களின் தாகத் தைத் தணிப்பதற்காக அமைத்தது.

இரண்டாம் பிராகாரத்தில் வலம் வரும் போது மயிலேறிய முருகன் சூரசம்ஹாரம் நிகழ்த்தும் காட்சியைக் கற்சிலை வடிவில் காணத் தவறிவிடாதீர்கள். அதே போல், மூடப்பட்ட மேற்கு வாசல் நுழைவாயில் எதிரில் உள்ள விநாயகருக்கருகே அருண கிரிநாதர் திருவுருவமும் இருக்கிறது. திருச் செந்தூர் வந்துவிட்டு அவரைப் பார்க்காமல் போய்விடலாகாது.

*கயிலை மலையனைய செந்தில் பதிவாழ்வே*
உவட்டின்றி ஆறு எனும் அக்ஷரமும், கமழ்



கூடப்பந்தாரும், முகப்ரவையும், தினம் என்
உளத்தின் பார்வையிடத்தில் நினைந்திட
அருள்வாயே

என்று **அவனை** நினைக்க அவனரு ளையே வேண்டிய அடியாரல்லவா!

முதல் பிராகாரத்துக்கு முன்னேறிச் சென்றால் தெற்கு நோக்கி அமர்ந்துள்ள தக்ஷிணாமூர்த்தி, வள்ளி அம்மன் சந்நிதி, நடராஜர், சனீஸ்வரர், பைரவர் என்று வரிசையாய்த் தரிசிக்கலாம். இப்பிராகாரத்தின் நடுவே, தங்கத் தகடுகள் போர்த்திய கொடி மரமும் மகாபலி பீடமும் உள்ளன.

மூலவரைத் தரிசித்துப் பிரசாதங்கள் வாங்கிக் கொண்டு ஷண்முகர் சந்நிதிக்கு வரலாம். தெற்கு நோக்கிய அழகான ஆறு முகன். தாரகனை வென்ற சக்தி வடிவேலும், தங்கக் கவசங்களும், தவநாதி ஹாரங்களும் பூண்டு, வள்ளி - தேவஸேனா சமேதராய் இங்கே காட்சி தருகிறார்.

எழுதரிய அறுமுகமு மணி நுதலும்
வயிரமிடை
யிட்டுச் சமைந்த செஞ்சுட்டிக்
கலன்களுந் துங்கநீள் பன்
னிரு கருணை விழிமலரு மிலகுபதி
னிருகுழையும்
ரத்நக் குதம்பையும் பத்மக் கரங்களுஞ்
செம்பொனூலும்
மொழிபுகழு முடை மணியு மரைவடமு
மழுயிணையு
முத்துச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ்
செங்கை வேலும்
முழுது மழ இயகுமர கிரிகுமரி யுடனுருகு
முக்கட் சிவன்பெறுஞ் சற்புத்ர வும்பர்தந்
தம்பிரானே''

என்று அருணகிரிநாதர் பாடிய வித் தையை நினைத்துப் பார்க்கலாம். 'எழுதரிய' - 'ஆகா! எழுத்தில் வடிக்க இயலாத அறுமுகம்' என்று ஆரம்பித்தவர், தமிழையும் தாளத்தையும் நெசவு செய்து செய்து, அந்த மயிலேறிய அறுமுகனை நம் முன் ஆடவே வைத்து விடுகிறார்.

அருணகிரியார் செந்தில் வந்து, தமிழால் அற்புதங்கள் நிகழ்த்தும் முன் அங்கே பாலசுப்ரமணியன் நிகழ்த்திய அற்புதங்கள் அனேகம் அனேகம்.

சகலகலாவல்லிமாலை, மீனாக்ஷியம்மை பிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசாமி பிள் ளைத் தமிழ் என்று தெய்வீக இலக்கியங்கள் படைத்த குமரகுருபரர் அருள்பெற்ற திருத் தலம் திருச்செந்தூர்தான். இங்கிருந்து சுமார் பதினெட்டு மைல் தூரத்திலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில் ஷண்முகக் கவிராயருக் கும் சிவகாமசுந்தரிக்கும் பிறந்தவர் குமர குருபரர். ஐந்து வயதுவரை ஊமையாகவே இருந்தது குழந்தை. பெற்றோர் திருச்செந்தூர் வந்து விரதமிருந்தனர். முருகன் குழந்தை முன் தோன்றி ஒரு பூவைக் காட்டிப் பேச வைத்துவிட்டான்! குழந்தையும் 'பூ' என்று முதல் சொல் பேசிற்று. 'பூ மேவு செங்கமல' என்று ஆரம்பித்து கந்தர் கலிவெண்பாவைப் பாடி முடித்தது!

வயிற்று நோயால் தவித்த பகழிக்கூத்தர் இங்குதான் திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ் பாடி நோய் நீங்கப் பெற்றார். இன்றும் கோயி லில் இப்பிள்ளைத் தமிழை ஓதுகிறார்கள்.

அடியேனும் கூட செந்திலாண்டவனால் ஆட்கொள்ளப்பட்டவன்தான். ஆறு வயதில், இளம்பிள்ளை வாதத்தினால் இரு கால்களும் வலுவிழந்தன. எந்த வைத்தியமும் பயனளிக் காமல் போகவே என் பெற்றோர் என்னைத் திருச்செந்தூர் அழைத்து வந்து செந்தில் ஆண்டவனுக்கே அர்ப்பணித்துவிட்டார் கள்! தன் பக்தர்களில் ஒருவரான சிவலிங்க நாடார் என்னும் மருத்துவர் மூலமாக என் கால்களை வலுவாக்கினான் முருகன். துண் டுகை விநாயகர் கோயிலிலிருந்து ஷண்முக விலாசம் வரை மணல் மேட்டுப் பொதி மண லில் விரைவாக ஓடிவரச் செய்து, என்னை முருகன் தனதாக்கிக் கொண்டான்! பெரும் பணிகளை எனக்கு அளித்து, வாழ்க்கையில் இன்றும் துணை நிற்கிறான்.

நினைக்க நினைக்க வியப்பூட்டுகிறது நிழல்போல் தொடரும் அவன் கருணை.

செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்று செரு குந்தடந் தெளிதரத்
தணியாத
சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழிய மெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப்
படுவேனோ!

என்று மீண்டும் மீண்டும் அவனைக் காணும் ஆசை பெருகுகிறது.

*(அடுத்த வாரம் திருப்பரங்குன்ற வேலன்)*



Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

